# கல்கி

படம் பார்க்கப் போகும்போது அதற்கென்று 'மாட்ச்' ஆகும்படியான புடவை இருக்க வேண்டியது நியாயமா இல்லையா? படத்திலுள்ள 'பிலிம் பார்டர்' 'விசிறி உடல்' புடவை - இந்தக் குறையைப் போக்கி விட்டதென்றே சொல்லலாம்.

'விசிறி' என்பது சினிமா ரஸிகர்களைக் குறிப்பிடுவதாக ஏற்பட்டு விட்டது; அதை மாற்ற முடியாது.

புடவையிலேயே பிலிம் பார்டர் போட்டிருக்க வேண்டுமென்றும் அவசியமில்லை. விசிறி உடல் மட்டும் உள்ள புடவையை வாங்கிக் கொண்டு தனியாக பிலிம் வாங்கித் தைத்துக் கொள்ளலாம். பிலிம் ஏராளமாய்க் கிடைக்கும்; ஓடாத படங்கள்தான் இப்போது தேடாமல் கிடைக்கின்றனவே.

கல்கி, செப்டம்பர் 16, 1941

## பொருளடக்கம்

பராபவ வைகாசி 2 ❊ மே 15



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.




ருஷியாவின் உபகிரகம்
இந்திய கம்யூனிஸ்ட் கட்சி.
அதன் உபகிரகம்
இந்திய சர்க்காராகத் தெரிகிறது.





தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்



மலர் 25 ● இதழ் 42



# இந்தியாவின் பண்பு

ராஜாஜி

இந்தியாவின் பண்பு சாந்தியே யாகும். இதனால்தான் போலும், ஆள்கிற கட்சியை ஆட்சேபித்துச் சட்ட சபைகளில் எதிர்க் கட்சிகள் பணிபுரிவதைக் கூட எழுத்தறிவற்ற மக்கள் ஒரு விரும்பத் தகாத — தவிர்க்கக் கூடிய — பூசல்போல் நினைக்கிறார்கள். 'விவாதம் என்பது பூசலல்ல; உபயோகமான விவாதங்கள் சட்டசபையில் நடக்க வேண்டுமாயின் அதற்கு முன்னதாகத் தேர்தல்கள் என்ற போராட்டம் நடைபெற வேண்டும்; அரசியல் கட்சிகள் தோன்றுவதிலும் வளருவதிலுமுள்ள போராட்டங்களும் இடம் பெறத்தான் வேண்டும்' என்பதையெல்லாம் மக்களின் மனத்தில் பதிய வைப்பது எளிதாக இல்லை. எந்தக் கட்சி ஆட்சிக்கு வந்தாலும் ஒரேமாதிரிதான் நடக்கும் என்று மக்கள் காண்கிறார்கள். வாஸ்தவத்தில் நடைபெறும் நிர்வாகத்தைப் பொறுத்தமட்டில் எந்தக் கட்சி அதிகாரத்தில் இருப்பினும் மக்கள் எந்த வித்தியாசத்தையும் காண்பதற்கில்லை. இதனால்தான் 'ஏன் இந்தப் போராட்டமும், பூசலும்' என்று எளிய மக்கள் கேட்கிறார்கள்.

கட்சிகளின் ஆதாரக் கொள்கைகள் சர்க்காரின் திட்டங்களையும் அவை செல்லும் வேகத்தையும் சூட்சுமமான முறையில் பாதிக்கின்றன. அவற்றை எளிய மக்களால் உடனடியாகக் காண முடிவதில்லை. என்றாலும் காலக்கிரமத்தில் இந்தக் கொள்கை மாறுபாடுகளால் ஆட்சியில் ஏற்படும் விளைவுகள் மக்களின் நிலையில் மிகுந்த மாறுபாட்டை உண்டுபண்ணும். ஒரு சந்தோஷமான நாட்டுக்கும், சஞ்சலமான நாட்டுக்கு மிடையேயுள்ள மாறுபாடுகளுக்கெல்லாம் காரணம் இந்தக் கொள்கை வித்தியாசங்களே.

இனி, சுதந்திரக் கட்சியின் கொள்கை என்ன? ஏழைகளுக்கு முன்னேற்றம் அளிக்க வேண்டுமாயின் நாட்டில் செல்வம் அதிகப்படியாக உற்பத்தியாக வேண்டும் என்பது அதன் நம்பிக்கை. செல்வத்தை எப்படி விருத்தி செய்வது? சர்க்கார் ஆதீனத்தின் மூலம் இதைச் செய்ய முடியாது என்பது சுதந்திரக் கட்சியின் கருத்து. உற்பத்தி உயர்வினால் சுய லாபம் பெறக் கூடிய தனி மனிதர்களின் ஊக்கத்தின் மீதே நாட்டுச் செல்வத்தை அதிகரிக்க முடியும் என்பது அதன் கொள்கை. இவ்வாறு தொழில் புரியும் தனிமனிதர்கள் தங்கள் சக்தியைத் துஷ்பிரயோகம் செய்யாமல் கண்காணித்துத் தடுப்பதே சர்க்காரின் பொறுப்பு. சர்க்காரே தொழிலில் பிரவேசித்துக் குழப்பம் விளைவிக்கக் கூடாது. சுருங்கச் சொன்னால், அரசாங்கத்தின் மீது மட்டுமே நம்பிக்கை வைத்திருப்பது காங்கிரஸ்; தனி மனிதனின் மீது நம்பிக்கை வைத்திருப்பது சுதந்திரக் கட்சி. சம்பளம் என்பது தவிர வேறெந்தக் கெட்டியான பிணைப்பினாலும் இணைக்கப்படாத சிப்பந்திகளைக் கொண்டு எழுப்பிய சர்க்காருக்கு உறுதியான உருவம் கிடையாது. எனவே, உற்பத்தித் துறையில் அதனால் உபயோகமாக எதுவும் செய்ய முடியாதெனச் சுதந்திரக் கட்சி கருதுகிறது.

பிரஜைகளின் உரிமைகள், சுதந்திரத் தொழில் இவற்றையும், சர்க்கார் குறைந்தபட்ச அதிகாரம் பெற்றிருப்பதையும் சுதந்திரக் கட்சி ஆதரிக்கிறது. மக்களின் அன்றாட நடவடிக்கைகளிலும் அரசாங்கத்துக்குப் பூரண ஆதிக்கம் வேண்டுமென்பது காங்கிரஸின் கொள்கை. மக்கள் நேர்மையாக இருப்பதைவிட நேர்மைக் குறைவாக இருப்பதே இயல்பு என்று எண்ணும் காங்கிரஸ், சர்க்காரையும் அதன் சிப்பந்திகளையும் மட்டும் நம்பி எல்லாப் பொறுப்பையும் அவர்களிடம் கொடுக்க விரும்புகிறது. 'இது ஒரு மாயை; தனியாரின் தொழில் நிர்வாகத்தின் கீழ் சொந்த அக்கறைகளைப் பேணி ஒருவர் பணியாற்றும்போதுதான் அதிகபட்சமான காரியத் திறனைக் காண முடியும்; எனவே அப்போதுதான் உற்பத்தி பெருகும்' என்கிறது சுதந்திரக் கட்சி. ஆனால்

காங்கிரஸோ தனியார் தொழிலை ஒரு தீமையாகக் கருதி அதை அதமபட்சமாகக் குறைக்க விரும்புகிறது. 'சர்க்கார் தொழில்' என்று எடுத்துக் கொண்டால் அது சிந்தனை அளவில்தான் தனியுருவம் படைத்தது. செயல் முறையில் நோக்கினால் அதுவும் ஆட்சியாளர், சிப்பந்திகள் ஆகிய தனி மனிதர்கள் மூலம்தான் பணி செய்தாக வேண்டும். இந்தத் தனி மனிதர்களும் மற்ற மனிதர்களைப் போலவேதான் நேர்மையாகவோ, நேர்மைக் குறைவாகவோ இருப்பார்கள். எனவே உற்பத்தி உயர்வில் சுயஊக்கம் உள்ள தனியாருக்குப் பதில் சுயஊக்கமில்லாத சர்க்கார் துறையைத் தேர்ந்தெடுப்பதில் பயனில்லை. சர்க்காரில் இடம் பெறுபவர்கள் மற்ற மனிதர்களைப் போலவே இருப்பார்கள் என்பதோடு, தங்களுடைய அதிகாரம் பெருகும்போது இவர்கள் மிகவும் சுயநலவாதிகளாகி, நேர்மையை விட்டு விடுவார்கள்' என்றெல்லாம் சுதந்திரக் கட்சி எடுத்துக் காட்டுகிறது. இந்த உண்மையை மக்கள் நன்கு சிந்திக்க வேண்டும். 'தனி மனிதருக்குப் பதில் அரசாங்கம்' என்று சொல்லப்பட்டாலும் அந்த அரசாங்கம் அசரீரியாக, கையும் காலும் இல்லாமல், தொழில் செய்ய முடியாது. மந்திரிகள், அதிகாரிகள் ஆகியோர் மூலமே அது இயங்க வேண்டும். இவர்கள் தேவதைகள் அல்ல. தனியார் துறையினரை விட இவர்கள் மாறுபட்டவர்களல்ல! நடைமுறையில் சர்க்கார் துறையில் அலட்சியமும், அக்கறையின்மையுமே காணப்படுகின்றன. தனியார் துறையிலோ லாப நஷ்டங்கள் முதலீட்டாளரைப் பாதிப்பதால் நல்ல கவனத்தோடு, வீண் விரயங்களின்றித் தொழில் நடத்தப்படுகிறது. இதை எந்தக் கட்சிச் சார்பும் அற்றவர்கள் வெளியிட்டுள்ள நம்பகமான சர்வேக்கள் ஐயமற நிரூபிக்கின்றன.

உண்மையான சோஷலிச இலட்சியமாகிய மக்களின் முன்னேற்றத்தைச் சர்க்கார் சர்வாதிபத்தியத்தினால் அடைய முடியாதென்று சோஷலிசச் சார்புள்ள பல கட்சிகளே திடமாக உணர்ந்துள்ளன. சர்க்கார் சர்வாதீனக் கொள்கையால் மக்கள் மேன்மேலும் அதிகார வர்க்கத்துக்கும் ஆளும் கட்சிக்கும் அடிமையாகி வருகிற நிலையைக் காங்கிரஸ் தவிர வேறெந்த சோஷலிசக் கட்சியும் விரும்பவில்லை. இந்த நிலையில் சிக்கலைத் தீர்க்க வழி ஒன்றே. மக்கள் அதிகபட்ச சுதந்திரம் பெற வேண்டும். நாட்டுச் செல்வத்தை உற்பத்தி செய்வதில் அவர்களுடைய சொந்த நலன்கள் நேரடியாக ஈடுபட அனுமதிக்க வேண்டும். இன்று காங்கிரஸ் ஆட்சியில் முதலீடு செய்பவர்களுக்கு ஊக்கம் குன்றி அவர்கள் தொழிலையே விட்டுவிடுமளவுக்கு வரிகள் உயர்ந்துள்ளன. முதலீடு குறையும்போது உற்பத்தியும் குறைந்து, அதனால் (முதலீடு செய்தவர் மட்டுமின்றி) மக்களே பின்தங்கி நிற்பார்கள் என்பதை உணர வேண்டும்.

இத்தகைய சர்வாதிபத்தியக் கொள்கையைக் காங்கிரஸார் மட்டும் ஏன் ஆதரித்து வருகிறார்கள்? தாங்கள் அதிகாரத்திலிருக்கிறோம் என்ற ஒரு காரணத்துக்காகவே அவர்கள் இந்த ஆதரவைத் தருகிறார்கள் என்பது யோசித்துப் பார்த்தால் புரியும். தேர்தலுக்குப் பின் வேறு சர்க்கார் ஆட்சிக்கு வந்தால் ஆட்சியாளரும் சிப்பந்திகளும் இவ்வளவு அதிகாரம் பெற்றிருப்பதை காங்கிரஸ்காரர்களே விரும்ப மாட்டார்கள். காங்கிரஸ் மட்டுமின்றி எந்தக் கட்சி ஆட்சிக்கு வந்தாலுமே அமுலாக்கக் கூடிய வகையில் அரசாங்கத்தின் சட்டம் அமைய வேண்டும். 'நாமே என்றைக்கும் ஆட்சி செலுத்துவோம்' என்கிற நினைப்பில் எந்த அரசாங்கமும் சட்டம் செய்துகொள்ளக் கூடாது. பிறர் ஆட்சிக்கு வரும்போது ஒரு விதியைப் பின்பற்றினால் அதைத் தாங்களும் ஒத்துக்கொள்ளக்கூடிய விதத்தில் சர்க்கார் சட்டம் செய்ய வேண்டும்.

அரசியல் உண்மைகளையெல்லாம் சொன்னேன். எனினும் மீண்டும் முதலில் கூறியதையே திரும்பச் சொல்கிறேன். இந்தியப் பண்பு சாந்தியே யாகும். மக்கள் தங்களைச் சர்க்கார் சுதந்திரமாக விடவேண்டுமென்றுதான் விரும்புகிறார்கள். சர்க்கார் என்பது ஒருவருக்கொருவர் ஒத்துப் போகக் கூடிய திறமை வாய்ந்த நல்ல மனிதர்களைக் கொண்ட கட்டுக்கோப்பான சபையாக அமைய வேண்டுமென்று விரும்புகிறார்கள். பல தரப்பட்ட கருத்துடைய சட்டசபையினரின் கருத்துக்களைச் சீர்தூக்கிப் பார்த்து இச்சபை ஆட்சி புரிய வேண்டுமென விரும்புகிறார்கள். நம் மக்கள் கட்சிப் பூசல்களில் ஏதும் நன்மை இருப்பதாக நம்பவில்லை. இது குறித்து நான் என் அபிப்பிராயத்தை வெளியிடவில்லை. ஆயினும் மக்கள் ஒரு மொத்தமாக எதை விரும்புகிறார்கள் என்று தோன்றுகிறதோ, அதை எடுத்துக் காட்டுகிறேன். இதில் நாம் கவனம் செலுத்த வேண்டும்.

## "அரசியல் சாஸனக் கட்சி"

சுதந்திரக் கட்சிக்கு ஏதாவது மாற்றுப் பெயரிட வேண்டுமாயின், அது 'பணக்காரர் கட்சி' என்பதல்ல. 'அரசியல் சாஸனக் கட்சி' என்பதே அதற்குப் பொருத்தமான மறு பெயர். 1949ல் பூரணமாக்கப்பட்ட இந்திய அரசியல் சாஸனம் சுதந்திரக் கட்சியின் ஆதாரக் கொள்கைகள் யாவற்றையும் உள்ளடக்கி யுள்ளது. அதே உருவில் சாஸனத்தைக் காக்க வேண்டுமென்பதே சுதந்திரக் கட்சியின் விருப்பம். சாஸனத்தின் விதிகளை நிறைவேற்றிய அரசியல் நிர்ணய சபை பணக்காரர்களின் கூட்டம் என்று கொண்டால்தான் சுதந்திரக் கட்சியைப் பணக்காரர் கட்சி எனலாம்.

பெர்மிட் — லைசென்ஸ் — கோட்டா வழங்கும் இன்றைய சர்க்காரால்தான் ஏழையைப்

★

பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்த்துச் சுயராஜ்யம் பெறுவதற்காக மக்கள் தைரியத்துடன் போரிட்டுக் கஷ்ட நஷ்டங்களைத் தாங்க காந்திஜி உணர்ச்சியூட்டினார். இளம் வாசகர்காள், இது திரும்பத் திரும்பச் சொல்லும் வெற்று வார்த்தையல்ல; உண்மை.

இது மட்டுமல்ல, சுதந்திரம் வந்தபின் நமது அரசாங்கமே அமைந்த பின்னும் நாம் பயமின்றி அதனிடம் நடக்க வேண்டும் என்று காந்திஜி உபதேசித்தார். மக்களின் பயமே தவறான நிர்வாகத்திலிருந்து விடுதலை பெறுவதற்குப் பெரும் எதிரியாகும்.

அன்பார்ந்த வாசகர்காள், உங்கள் வயது என்னவாயினும் தொழில் என்னவாயினும் உங்கள் இதயத்தில் எழும் சத்தியத்தைக் கொலை செய்து விடாதீர்கள். உங்கள் மனச்சாட்சிப்படி நீங்கள் அறியும் உண்மைப் படி நீங்கள் ஒழுக வேண்டுமாயின் அதற்குத் தைரியம் தேவை. பயம் என்பது ஆன்மாவுக்கு விரோதி. பயமும் அசத்தியமும் காட்டும் வழியில் சென்று நீங்கள் அடையும் எதுவும் உங்கள் வாழ்வில் க்ஷேமம் தராது. இந்த




சத்தியத்தை நீங்கள் ஒப்பவில்லையாயின், காந்திஜியின் நாட்டில் வாழவும், அவரது பெயர் இந்நாட்டுக்கு அளித்துள்ள கௌரவத்தில் பங்கு பெறவும் தகுதியில்லாமல் போய் விடும்.

★

தேர்தல் காலத்தில் ஆளும் கட்சியினர் பல நல்ல காரியங்களைச் செய்யச் சர்க்கார் கஜானாவின் நிதியம் இருக்கவே இருக்கிறது. எதிர்க்கட்சிகளுக்கு இந்த வசதி கிடையாது. தாங்கள் ஆட்சிக்கு வந்தால் நிறைவேற்றக்கூடிய கொள்கைகளை மட்டுமே அவர்கள் கூற முடியும். காங்கிரஸ் கட்சி தனக்குள்ள இந்தப் பெரிய கருவியைத் துஷ்பிரயோகம் செய்வதற்கு வாக்காளர்களின் அறியாமையும் உதவுகிறது. அறியாமை போய் விட்டால் இந்த அநுகூலமும் போய்விடும். இப்போது வாக்குகள் வாங்குவதற்காகச் செய்கிற காரியங்களைக் கூர்ந்து பரிசீலித்தால் அவை எதிர்க் கட்சிகள் கூறும் கொள்கைகளுக்கு இசைவாகவே செய்யப்பட்டவை என்று தெரியும். இதனால் எதிர்க்கட்சிகளின் பயனும் நிரூபணமாகிறது. கட்டுப்பாடுகள் பலவற்றை நீக்கியிருப்பதும், தங்கக் கட்டுப்பாட்டைப் பற்றி யோசிப்பதும் எதிர்க்கட்சியின் அஸ்திரத்தை ஆளும் கட்சி கையாளுவதற்குச் சில உதாரணங்கள்.

★

தங்கக் கட்டுப்பாட்டை நீக்குவதாயின், புது ஷரத்துக்களை உண்டாக்கிப் பொற்கொல்லர்கள் அதிகாரிகள் முன்னும், 'ருத்திர தாரிகளின்' முன்னும் பல்லைக் காட்டும்படி செய்யக் கூடாது. இவ்விதம் புது உத்தரவுகள் வராது என்று நம்புகிறேன். லஞ்சம் கொடுப்பதற்குப் பொற் கொல்லர்களின் குறைந்த ஊதியம் அநுமதிக்காது. புதிதாகத் தங்க நகை வியாபாரத்தில் பெர்மிட் முறையில் ஏகபோகியம் கொண்டு வந்தால் பொருள் வாங்குபவர்கள் பாதிக்கப்படுவார்கள். எனவே, தங்கக் கட்டுப்பாட்டை ரத்து செய்வதாயின், இந்த நல்ல காரியத்தை நல்ல முறையிலேயே செய்வார்களாக!

★

அமெரிக்க சர்க்கார் இந்திய சர்க்காருக்குச் செய்யும் உதவி நம் நாட்டுக்கு நன்மை செய்வதோடு, அமெரிக்கர் அறியாமலே காங்கிரஸ் கட்சி இங்கு ஆட்சியில் நீடிக்கவும் உதவுகிறது என்று நான் சமீபத்தில் பேசினேன். நுணுக்கம் தெரியாத சில தமிழ்ப் பத்திரிகைகள் இந்தக் கூற்றைப் புரிந்து கொள்ள முடியாமல், நான் அமெரிக்காவிடம் கொண்டிருந்த நட்பு மாறி விட்டதாகக் கருதுகின்றன. இது அறிவீனம். நல்ல காரியமும் அது செய்யப்படும் விதத்தால் தீமை விளைவிக்கக் கூடும். ஒரு சர்க்கார் இன்னொரு சர்க்காருக்கு உதவுவதால், ஆள்கிற கட்சிக்கு அதிக அதிகாரங்கள் கொடுக்கிறது; அதை நிர்வாகத் தவறுகளிலிருந்து தப்ப வைக்கிறது.

★

பாதுகாப்புச் சட்டத்தை ரத்து செய்ய வேண்டும் என்று கோரிய தீர்மானம் மக்கள் சபையில் தோற்று விட்டது. நெருக்கடி நிலைமைக்கு ஆதரவாக 122 காங்கிரஸ்காரர்களும் அரசியல் சாஸனத்துக்கு ஆதரவாக 41 எதிர்க் கட்சியாளரும் வாக்களித்திருக்கிறார்கள். உண்மையில் இது பிரதமருக்கு அவரது கட்சியினரே தந்த தோல்வியாகும். காங்கிரஸின் 122 வாக்குகளும் கட்டுப்பாட்டின் கீழ்ப் பெறப்பட்டவை. நெருக்கடிப் பிரகடனத்தை ரத்து செய்யக் கோரிய 41 வாக்குகளும் சுதந்திரமானவை. தேசப் பாதுகாப்பில் எந்த நெருக்கடியும் இல்லை; காங்கிரஸ் கட்சியில்தான் இருக்கிறது. காங்கிரஸ் தலைவர்கள் பாதுகாப்புச் சட்டத்தை விரும்புவது அந்நிய எதிரியை முகங் கொள்வதற்காக அல்ல; கட்சி நெருக்கடிகளைச் சமாளிப்பதற்காகத்தான்.



# இரு பத்ம பூஷணங்கள்

இந்த ஆண்டு ராஷ்டிரபதியின் "பத்ம பூஷண்" விருது பெற்றவர்களில் நமது அண்டை ராஜ்யமான கேரள ராஜ்யத்தைச் சேர்ந்த இருவர் நமது கவனத்தைப் பெரிதும் கவர்கிறார்கள்.

தமிழ் நாட்டில், சுதந்திரப் போராட்ட காலத்தை நினைவில் வைத்துக் கொண்டிருப்பவர்கள், கோழிக்கோடு கே. பி. கேசவ மேனன் அவர்கள் பெயரை மறந்திருக்க மாட்டார்கள். அவர் வைக்கம் சத்தியாக்கிரகப் போராட்டத்தில் ஈடுபட்டுச் சிறை சென்ற தேசபக்தர். அன்றைய மலையாள மக்களைத் தேச பக்தி கொள்ளச் செய்ய "மாத்ரு பூமி" என்ற பத்திரிகை தொடங்கினார். இன்று "மாத்ரு பூமி" கேரள நாட்டில் பல லட்சக் கணக்கான பிரதிகள் செலாவணியாகும் முதல் தரமான பத்திரிகையாக விளங்குகிறது.

கதைகள், பிரயாணக் கட்டுரைகள், சுயசரிதம் ஆகியவை இயற்றியிருக்கிறார். அவரது இலக்கியப் பணிக்கு 1959ல் சாகித்திய அகாதெமியின் பரிசும் கிடைத்திருக்கிறது. எழுபத்தொன்பது வயது நிறையும் திரு கேசவ மேனன் கௌரவிக்கப்பட்டது எல்லா விதத்திலும் பொருத்தமானதே.

அடுத்தாற்போல் நமது கவனத்தைக் கவருபவர் மன்னத்து பத்மநாபன். இவரும் எண்பது வயதான சிங்கம். கேரள நாட்டில் கம்யூனிஸ்டுகள் வசம் ஆட்சி சென்றபோது, அதனை எதிர்த்து, கேரள நாட்டு மக்கள் நடத்திய இயக்கத்தை ஒருமுகப்படுத்தி, கம்யூனிஸ்ட் பிடியிலிருந்து கேரளத்தை விடுவித்த பெருமை இவரையே சாரும்.

அதற்கு முன் அவர் தம் இனத்துக்குச் செய்துள்ள சேவை மிகப் பெரிது. 1914ம் ஆண்டு "நாயர் சமூக சேவை சங்கம்" என்னும் ஒரு ஸ்தாபனம் தொடங்கினார். கல்வித் துறையில் அது செய்துள்ள தொண்டு அளவிடற்பாலது. சின்னஞ் சிறு பழக்கடை அறையில் 1914ல் தொடங்கப்பட்ட இச்சங்கம், பல்கிப் பெருகி இன்று 86 பள்ளிக்கூடங்களையும், ஓர் இன்ஜினீயரிங் கல்லூரி உட்பட 17 கல்லூரிகளையும், 3 ஆசிரியப் பயிற்சிக் கல்லூரிகளையும், ஒரு பாலிடெக்னிக் பள்ளியையும் நடத்தி வருகிறது. இப்பயிற்சிக் கூடங்கள் எல்லாவற்றிலுமாகச் சேர்ந்து சுமார் 65,000 மாணவர்கள் பயிலுகிறார்கள். இத்தகைய மாபெரும் ஸ்தாபனத்தின் உயிரும் மூச்சும் தலைவருமாக விளங்குபவர் மன்னத்து பத்மநாபன். இருவரும் நீடு வாழ்க!

மேலே : மன்னத்து பத்மநாபன்
கீழே : கேசவ மேனன்



# இதை நான் எதிர்பார்க்கவே இல்லை



"என்னுடைய சொத்துக்களை விற்றவுடன் அந்தப் பணத்தை பாங்க் ஆப் இந்தியா-வில் போட்டு வைக்கும்படி எனக்கு புத்தி மதி கூறினார்கள். நான் அந்தப் பணத்தை எப்போது வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ள முடியும் என்பதும் எனக்குத் தெரியும். ஆனால் பணத்தை பத்திரமாக வைத்-துக்கொள்ளுவதற்கு ஏதாவது கட்டணம் வாங்குவார்கள் என்று நான் நினைத்தது போக, பிரதி வருஷத்திற்கும் ரூ. 100/-க்கு ரூ. 4/- என் கணக்கில் கூட்டிக்கொண்டே போவார்கள் என்று நான் நினைக்கவே இல்லை. இவைகள் எல்லாம் இந்த அழகிய சிறு புத்தகத்தில் எழுதியிருக்கிறது பார்த்-தாயா!

எனக்கு எழுதத் தெரியாது. ஆனால் என் போன்றவர்களுக்கு சுலபமானதொரு முறையை வகுத்துள்ளார்கள்.

நான் பணக்காரன் அல்ல; ஆயினும் பாங்க் ஆப் இந்தியா என்னை ஒரு பிரபுவைப் போல நடத்திவருவது என்னை மிகவும் கவர்ந்து விட்டிருக்கிறது. ஒரே குடும்பத்தினரைப் போல என்னை மதித்து, சிறந்த புத்திமதிகளும் அவ்வப்பொழுது அளிக்கிறார்கள். ஆம். அவர்கள் உண்மையான நண்பர்கள்தான்."

## தி பாங்க் ஆப் இந்தியா லிட்.

T. D. கன்ஸாரா, ஜெனரல் மானேஜர்



1\. அமரர் லால்பஹாதூர் விதைத்த கோதுமைப் பயிரை ஸ்ரீமதி லலிதா சாஸ்திரி அறுவடை செய்கிறார். இந்தக் கோதுமை விதைகளாகப் பயன் படுத்தப்பட்டு உணவுப் பெருக்கத்துக்கு உதவும்.

2\. ஊடுருவல்காரர்களைப் பற்றி முதன் முதலில் செய்தி தந்த பத்மஸ்ரீ குல்மார்க் டெலிலுக்கு அந்த ஊடுருவல்காரர்கள் கொடுத்த பாகிஸ்தான் நோட்டைக்கூர்ந்துகவனிக்கிறார்பிரதமர்.



3\. 35 வருஷங்களாகத் தமிழ்ப் பணி ஆற்றி வரும் மாணவர் மன்றத்துக்கெனப் புதிதாக எழவிருக்கும் கட்டடத்துக்கு டாக்டர் மு. வரதராசனார் அடிக்கல் நாட்டுகிறார்.

4\. சங்கீத நாடக அகாடமியின் உபதலைவர் மஜும்தார் சங்கீத நாடக அகாடமியின் 'பெல்லோஷிப்' விருதை ஸ்ரீ டி. கே. ராய் அவர்களுக்கு வழங்குகிறார்.



5\. கொல்லங்கோடு ராஜா வேணுகோபால வர்ம ராஜாவின் சஷ்டியப்தபூர்த்தி வைபவம் விமரிசையாகக் கொண்டாடப் பட்டது. ராஜா, சேலம் சுகுவனேசுவர சுவாமி கோயிலுக்கு யானைக் குட்டி யொன்றை பிரும்மஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர் மூலமாக வழங்கினார்.





# டியாரா லானோலின் லோஷன் ஷாம்பூ

## தலை மயிரை பாதுகாக்க விரும்புகிறவர்களுக்கு!



இதர ஷாம்பூக்களை உபயோகித்து உங்கள் தலைமயிர் வரள்வதனால் நீங்கள் மனவேதனை படுகிறீர்களா? அப்படியானால் உடனே இந்த புதிய இணையற்ற ஜே. கே. ஹெலன் கர்டிஸாரால் தயாரிக்கப்பட்ட லானோலின் லோஷன் ஷாம்பூவை உபயோகித்து பாருங்கள். இது உங்கள் தலை மயிருக்கு சக்தியையும், அழகான தோற்றத்தையும், பளபளப்பையும் அளிக்கவல்லது. முதல் உபயோகத்திலேயே, இந்தியாவின் ஒரே தயாரிப்பான லானோலின் லோஷன் ஷாம்பூவே, நீங்கள் விரும்பத்தக்க ஷாம்பூ என்பதை தெரிந்து கொள்வீர்கள். இதர ஷாம்பூவினால் இழந்த முக்கியமான சரும எண்ணெயை திருப்பி அளிப்பது போலிருக்கும் லானோலின்! டியாரா லானோலின் லோஷன் ஷாம்பூ அதிக நுரை தரக்கூடியது. ஒவ்வொரு தலை மயிருக்கும் போஷாக்களிக்கிறது. அதி விரைவில் அழுக்கையும் சிக்கையும் போக்குகிறது. உங்கள் தலை மயிரை உடனே உங்களிஷ்டப்படி அமைக்க முடிகிறது—மேலும் நீங்கள் நினைத்ததை விட அதிக அழகுடன் விளங்குகிறது.

டியாரா லானோலின் லோஷன் ஷாம்பூ
உங்கள் தலை மயிருக்கு புத்துயிர் அளிக்கிறது.

**ஜே.கே. ஹெலன் கர்டிஸ்**

பூரண விநியோகஸ்தர்கள்:
ஸ்பென்ஸர் அண்டு கம்பெனி லிமிடெட்.
மதராஸ் . பம்பாய் . டெல்லி . கல்கத்தா.

JKH-5656C. TAM

# சிவனருட் செல்வர்

காவிரியாற்றங் கரையிலுள்ள பயிரும், தத்துவத்தை உணர்த்துவதாகப் பாடுகிறார் சேக்கிழார். அப்பயிர்கள் ஆள் உயரம் இருக்கின்றன. நிரம்பப் பக்தியுள்ளவர்கள் எவ்வளவு அடக்கத்துடன் இருப்பார்களோ, அவ்வளவு அடக்கத்துடன் தலைவணங்கி இருக்கின்றனவாம் கதிர்கள். அப்பரும், ஞான சம்பந்தரும் சந்தித்தால் எப்படியிருக்கும்? யார் யாருடைய காலில் முதலில் விழுந்தார் என்று ஆயிரம் கண் படைத்தவர்களுக்கும் தெரியாது. தொண்டர்கள் ஒருவரை யொருவர் வணங்குவது போன்றே தோற்றமளிக்கின்றனவாம் வயலில் ஒன்றன்மீதொன்று ஆடி விழும் பயிர்கள். இச்சிறப்பினைப் பெற்றுள்ளது சோழவள நாடு.

**பத்தியின் பால ராகிப் பரமனுக் காளாம் அன்பர்**
**தத்தமிற் கூடி னார்கள் தலையினால் வணங்கு மாபோல்**
**மொய்த்தநீள் பத்தி யின்பால் முதிர்தலை வணங்கி மற்றை**
**வித்தகர் தன்மை போல விளைந்தன சாலி யெல்லாம்.**

நெற்பயிர்களைக் கண்டவுடனே சிவனடியார்கள் நினைவு யாருக்கு வரும்? 'கண்டு முதல் எவ்வளவு? விலை என்ன? எல்லாவற்றையும் அரசாங்கத்துக்கே தர வேண்டுமா?' என்றுதானே நமக்கெல்லாம் தோன்றும்? ஆனால், சேக்கிழார் பெருமான் சிவனடியார்களை நினைத்தார். பத்தி என்றால் 'பயிர்கள்' என்றும், 'அன்பு' என்றும் பொருள் உண்டு. வித்தகர் ஞானத்தைப் போன்றிருந்ததாம் நெல். சாலி என்றால் நெல் என்று

திருமுருக கிருபானந்த வாரியார்

பொருள். நெல்லையப்பருக்குச் சாலிவா டீசுவரர் என்று பெயர்.

**வீதிகள் விழவின் ஆர்ப்பும்**
**விரும்பினர் விருந்தின் ஆர்ப்பும்**
**சாதிகள் நெறியில் தப்பா**
**தனயரும் மனையில் தப்பா**
**நீதிய புள்ளும் மாவும்**
**நிலத்திருப் புள்ளு மாவும்**
**ஓதிய எழுத்தாம் அஞ்சும்**
**உறுபிணி வரத்தாம் அஞ்சும்**

சோழ வள நாட்டில் எந்த வீதியைப் பார்த்தாலும் ஒரே திருவிழா மயம். வீதிகளில் விழாவின் ஒலி; வீடுகளிலே விருந்தினர் ஒலி. விருந்தில்லை யென்றால் வீடு இல்லை.

அந்த நாட்டில் குழந்தை இல்லாத வீடு ஒன்றுகூட இல்லையாம். பசு எங்கே புல் மேய வேண்டுமோ அந்த இடத்தில் தான் மேயுமாம்; அந்த இடத்தை விட்டு வேறு இடம் சென்று மேயா தாம். அங்குள்ள மக்கள் காதலாகிக் கசிந்து ஐந்தெழுத்தை ஓதுகிறார் களாம். அதனால் அந்நாட்டிலே உள்ள மக்களின் உடலுக்கு நோய்கள் வரா வாம். அங்கே எப்படிப் போவது என்று கைதொழுது வணங்குகின்றனவாம். ''ஓதிய எழுத்தாம் அஞ்சும் உறுபிணி வரத்தான் அஞ்சும்.'' (அஞ்சும் என்பது பஞ்சாட்சரத்தைக் குறிக்கும்போது பெயர்ச் சொல்லாகவும், நோய்களைக் குறிக்கும் போது வினைச் சொல்லாக வும் பயன்படுத்தப்பட்டுள்ளது.)

அநபாயச் சக்கரவர்த்தியின் குளிர் நிழல் எவ்வாறு இருக்குமோ அவ்வாறு இருக்கின்றதாம் அந்நாடு. ''அந் நற்றமிழ் நாட்டைப் புகழ என்னால் இயலுமோ?'' என்று அடக்கமாகச் சொல்லிக் கொள்கிறார்:

**''நற்றமிழ் வரைப்பின் ஓங்கு**
**நாம்புகழ் திருநா டென்றும்**
**பொற்றடந் தோளால் வையம்**
**பொதுக்கடிந் தினிது காக்கும்**
**கொற்றவன் அநபாயன் பொற்**
**குடை நிழற் குளிர்வ தென்றால்**
**மற்றதன் பெருமை நம்மால்**
**வரம்புற விளம்ப லாமோ?''**

நாட்டுச் சிறப்பு முடிந்ததும் நகரச் சிறப்பைச் சொல்லுகின்றார்:

**சொன்ன நாட்டிடைத் தொன்மையில் மிக்கது**
**மன்னு மாமல ராள்வழி பட்டது**
**வன்னி யாறு மதிபொதி செஞ்சடைச்**
**சென்னி யார்திரு வாரூர்த் திருநகர்**

திருவாரூர் மிகவும் பழைமையானது. இலட்சுமி தேவியே இருந்து வழி பட்ட திவ்வியத் தலம். இன்றைக்கும் திருவாரூரில் இலட்சுமி தேவியின் ஆலயம் இருக்கிறது. அவ்வூரிலே சிவபெருமான் நிரந்தரமாய்ப் புற்றிடங் கொண்டார். சோழ மன்னர்களுக்கு இராஜதானியாக இருப்பது அந்தத் திருத்தலம்.

**வேத ஓசையும் வீணையின் ஓசையும்**
**சோதி வானவர் தோத்திர ஓசையும்**
**மாதர் ஆடல் மணிமுழ வோசையும்**
**கீத ஓசையு மாய்க்கிளர் வுற்றவே**

அவ்வூரிலே உத்தமமான அந்த ணர்கள் இருந்து வேதங்களைச் சொல் லிக் கொண்டிருக்கிறார்களாம். இந் திரன், சந்திரன், பிரம்மா, விஷ்ணு ஆகியவர்கள் ஸ்தோத்திரம் செய் கின்ற ஓசையும் கேட்கின்றதாம். கோயிலுக்கு வந்த பெண்கள் நாட்டிய மாடுகிறார்களாம். ஆக, வேத ஓசை, கீத ஓசை இவற்றுடன் மாதர் ஆடல் மணிமுழவோசையும் ஒலிக்கின்றதாம்.

**படர்ந்த பேரொளிப் பன்மணி வீதிவார்**
**இடந்த ஏனமும் அன்னமும் தேடுவார்**
**தொடர்ந்து கொண்டவன் தொண்**
**டர்க்குத் தூதுபோய்**
**நடந்த செந்தா மரையடி நாறுமால்**

ஏனம் எனப்படும் பன்றி வடிவில் தேடிய திருமாலுக்கும் அன்னத்தின் வடிவில் தேடிய பிரமனுக்கும் எம் பெருமானின் அடிமுடி தெரியவில்லை. அப்படிப்பட்டவரின் சரணக்கமலமலர் ஆரூர் வீதியில் மணக்கிறதாம்.

இதனை மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை சொல்லுகின்ற அழகே அழகு. இரவிலே தாமரை பூக்குமா? பூக்காது. இரவில் மலர்வது குமுதம். பகலில் மலர்வது தாமரை. ஆனால், திருவாரூரில் தாமரை இரவிலும் மலர்ந்தது. ஆம். இரவிலே கட்டாந் தரையில் ஆண்டவனின் பாத தாமரை முளைத்தது எப்போது? சுந்தரமூர்த்தி நாயனார் பரவையாரை விடுத்துச் சென்று, திருவொற்றியூரில் சங்கிலி யாரை மணந்து கொண்டார். இதனை அறிந்த பரவை நாச்சியார் வெகுளியினால் தளர்ந்திருந்தார். திருவாரூர் வந் டைந்த சுந்தரர் பரவையாரது ஊடலால் துன்பமாம் பரவையில் மூழ்கினார். பேயும் உறங்கும் பேரிருட் கங்குலில் பிறைச்சடைப் பெருமானை நினைத்து, ''எம்பெருமானே! தேவரீரே சென்று பரவையின் ஊடலைத் தீர்த் தருள வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார். அடியார் குறை நீக்கும் அம்பலக்கூத்தர் நெடியோனும் காண

## ஜேய் கொண்டு ஸ்நானம் செய்யும் ஒவ்வொரு முறையும்

## உங்கள் சருமத்துக்கு மென்மை, ஒளி, கவர்ச்சி ஆகியவை கிட்டுகின்றன

ஜேய் அழகு சாதன சோப் சரும துவாரங்கள் அனைத்தையும் சுத்தப்படுத்தி, சருமத்தை மிருதுவாக்குகிறது. ஜேய் கொண்டு ஸ்நானம் செய்யும் ஒவ்வொரு முறையும் உங்கள் சருமத்துக்கு மென்மை, ஒளி, கவர்ச்சி ஆகியவை கிட்டுகின்றன. பளபளக்கும் ரேக்கு 'ராப்ப'ரின் காரணமாக அதில் அடங்கியுள்ள மனோகர மல்லிகை நறுமணம் நிலைத்து வீசுகிறது.




டாடா தயாரிப்பு

உங்கள் எழில் பெருக

# ஜேய்

அழகு சாதன சோப்

Bensons/ITJS-107- Tam

# கோல்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!

ஏனெனில் ஒரே தேய்ப்பில் கால்கேட் கிரீம், துர்நாற்றத்தையும், சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சதவிகிதத்தை ஒழித்துவிடுகிறது.

கால்கேட், 10ல் 7 சந்தர்ப்பங்களில் உடனடியாக வாய் துர்நாற்றத்தை அகற்றுகிறது என்பதையும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பெருமளவில் ஏராளமானவர்களுக்குச் சொத்தை தடுக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான ஆராய்ச்சிகள் நிரூபித்துள்ளன. இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு!

கால்கேட்டின் நீடித்திருக்கும் நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்!

நீங்கள் பற்பொடியை விரும்பினால் இந்தப் பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.







பல் சுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்மையான பற்களைப் பெறவும் வழக்கமாக கால்கேட்டினால் பல் துலக்குங்கள்

...உலகிலேயே பெரும்பாலானவர்கள் மற்றெல்லாப் பற்பசைகளையும் விட, கால்கேட் டென்டல் கிரீமையே வாங்குகிறார்கள்.

அடிகள் தோயத் திருஆரூர் வீதியில் நடந்து சுந்தரருக்காகப் பரவையிடம் தூது சென்றார். இதனைத்தான், — "ஆண்டவனின் சரணக்கமலாலயத்தின் ஞான மணம் திருவாரூரில் வீசுகிறது" என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.

உள்ளம் ஆர்உரு காதவர் ஊர்விடை
வள்ள லார்திரு வாரூர் மருங்கெலாம்
தெள்ளும் ஓசைத் திருப்பதி கங்கள்பைங்
கிள்ளை பாடுவ கேட்பன பூவைகள்

இப்பாடலைக் கேட்டால் யாருக்குத்தான் உள்ளம் உருகாது? ஊர்விடை என்றால், விடையின் மீது ஊர்கின்றவன் என்று பொருள். சிவபெருமானின் வாகனம் காளை. அந்த ஊரிலே நல்ல தமிழ்த் தேவாரப் பதிகங்கள் ஓயாது ஒலித்ததால் அவற்றைக் கேட்டுக் கிளிகளும் தேவாரத் திருப்பதிகங்களை ஓதுகின்றனவாம்.

"அன்ன தொல்நக ருக்கர சாயினான்
துன்னு செங்கதி ரோன்வழித் தோன்றினான்
மன்னு சீர்அந பாயன் வழிமுதல்
மின்னும் மாமணிப் பூண்மனு வேந்தனே."

தொல்நகராகிய ஆரூருக்கு அரசனான அநபாயச் சக்கரவர்த்தியைப் பற்றிச் சொல்லுகின்றார் சேக்கிழார்.

பெரிய புராணத்தைப் பாட வைக்கின்ற இச்சக்கரவர்த்தி சூரியவம்சத் தோன்றல். இவனது மூதாதையர் யார்? "மின்னும் மாமணிப் பூண்மனு வேந்தனே." அவன் பெயர் மனு நீதிச் சோழன்.

மனுநீதிச் சோழன் கல்லாத கலையில்லை. அவன் இரவு நேரத்தில் மாறு வேடம் பூண்டு நகர்ச் சோதனை செய்து மக்களின் குறைகளை அறிந்து நீக்கினான். மனுநீதிச் சோழனின் ஆட்சி செம்மையாக நடைபெற்று வருகிறது. அம்மன்னர் பெருமான் வீதிவிடங்கப் பெருமான் மீது காதலாகிக் கசிந்து கைதொழுதான். அவனுக்குப் புத்திரபாக்கியம் இல்லை. ஆதலால், — கோதானம், வஸ்திர தானம், பூதானம் என்று பல தானங்களைச் செய்தான்.

மனுநீதிச் சோழன் செய்த தவத்தின் பயனாக அரசியார் கருக்கொண்டார். மணிவயிறு வாய்த்த அம்மையாருக்கு மைந்தன் பிறந்தான்.

"அறம்பொருள் இன்ப மான
அறநெறி வழாமல் புல்லி
மறங்கடிந் தரசர் போற்ற
வையகம் காக்கும் நாளில்
சிறந்தநல் தவத்தால் தேவி
திருமணி வயிற்றின் மைந்தன்
பிறந்தனன் உலகம் போற்றப்
பேர்அரிக் குருளை அன்னான்."

அறம், பொருள், இன்பம் மூன்றும் தர்மம் தவறாமல் இருக்க வேண்டும்.

பொருளுக்கும் இத்தனை அரும் பெரும் மதிப்பு இருக்கின்றதே என்று யாரும் தவறான வழியில்



செல்வம் திரட்டக் கூடாது. அறத்தின் வழியே பொருள் வரவேண்டும். அறவழியில் வராமல், பிறர் அழ அழ ஒருவன் பொருளைச் சேர்க்கக் கூடாது. பிறரை அழ வைத்துச் சம்பாதித்தால், சம்பாதித்தவன் அழ அழ அவன்

கையை விட்டு அந்தப் பொருள் போய் விடும் என்று எச்சரிக்கை செய்கின்றார் திருவள்ளுவர்.

"அழக்கொண்ட எல்லாம்
அழப்போம் ; இழப்பினும்
பிற்பயக்கும் நற்பா
லவை."

பொருளும் அறத்துடனே கூடி யிருக்க வேண்டும்.

அறன்ஈனும் இன்பமும் ஈனும்
திறன் அறிந்து
தீதின்றி வந்த பொருள்

அறம் என்றால் தர்மம் செய்வது; கொடுப்பது என்று பொருள். அறம் செய்வதும் அறத்துடன் இருக்க வேண்டும். ஒருவனுக்கு நான்கணா கொடுக்கின்றோம். அதனைப் பெற்றுக்கொண்டவன் ஒரு கத்திரிக்கோல் வாங்கி ஊரார் பையைக் கத்திரித்துப் பணத்தை அபகரித்தால் நாம் கொடுத்தது அறத்துடன் கூடிய அறமாகாது. ஆகவே, தர்மம் தர்மத்துடன் இருக்க வேண்டும். அது போன்றே, இன்பம் தாலி கட்டிய மனைவியிடம் பெறுகின்ற இன்பமாக இருக்க வேண்டும். தவறான வழியில் செல்லக் கூடாது.

அறம் பொருள் இன்பங்களை நல்ல முறையில் நடாத்திய மனுநீதிச் சோழனுக்கு உலகெல்லாம் போற்றும் படியான சிங்கக் குட்டி போன்ற மைந்தன் பிறந்தான். மனுநீதிச் சோழன் வீதிவிடங்கனை வழிபட்டுப் பெற்றதால் அம்மைந்தனுக்கு வீதி விடங்கன் என்றே பெயர் சூட்டினான்.

# 3. ஆன் கன்றும் கோன் கன்றும்

வீதிவிடங்கன் எல்லோரும் களிக்கும் வண்ணம் வளர்ந்து வந்தான். ஆசிரியர்கள் எல்லோரும் அரண்மனைக்கே வந்து குழந்தைக்குக் கல்வி பயிற்றுவித்தார்கள்; பள்ளத்தில் வெள்ளம் வந்து சேர்வது போல், எல்லாக் கலைகளும் அவனிடம் வந்து தங்கின: அவனுக்குப் பதினாறு வயதாகி விட்டது; அது இளவரசு எய்துகின்ற பருவம். அந்தப் புதல்வனைப் பார்த்துப் பார்த்து மகிழ்ந்தான் மன்னன்.

அழகும், கல்வியும், சீலமும் குடி கொண்டிருந்த வீதிவிடங்கன் ஒரு நாள் காலையில் தந்தையை வணங்கி விட்டுக் கோயிலுக்குப் புறப்பட்டான். மந்திரி சேனாதிபதிகள் ஆகியோரின் பிள்ளைகள் வீதிவிடங்கனுடன் தேரில் புறப்பட்டார்கள்.

ராஜவீதியில் தேர் சென்றபோது வீதியில் எள்ளிட இடமின்றி மக்கள் திரண்டு மொய்த்தனர்.

மனுநீதிச் சோழன் தவமிருந்து பெற்ற ஒரே பிள்ளை இப்படிப் போகும் போது, தரும தேவதையே அம்மன்னனின் பண்பைச் சிறிதும் கருணையின்றிச் சோதிக்க விரும்பியது! தரும தேவதையே ஓர் இளங்கன்று வடிவத்துடன் தாய் மடியில் நிறையப் பால் குடித்து விட்டு ஒருவர் கண்ணுக்குப் புலனாகாதபடி அதிவிரைவில் துள்ளிக் குதித்து ஓடி வந்தது. ராஜ வீதியில் பவனி செல்கின்ற அனைவர் கண்களிலும் மண்ணைத் தூவிவிட்டு வேகமாய்ச் சென்று வீதிவிடங்கன் சென்ற தேர்க்காலில் விழுந்து, குடல் சரிந்து, உடல் முறிந்து, உயிர் துறந்தது. சப்தம் கேட்டு வீதிவிடங்கன் தேரை விட்டுக் குதித்தான். அவனுடன் சென்றவர்கள் அனைவரும் தேர்க்காலில் கன்று சிக்கி மாண்டிருப்பதைக் கண்டார்கள். மனுநீதிச் சோழன் ஆட்சியில் யாரும் வளர்பிறையில் பல் குச்சி கூட ஒடிப்பதில்லை; செடி கொடிகளுக்கும்கூட யாரும் துன்பம் செய்ததில்லை. அந்நிலையில் பசுவின் கன்று தேர்க் காலில் சிக்கி இறந்ததை வீதி விடங்கன் கண்டு உள்ளமெல்லாம் குழைந்து உருகிக் கண்ணீர் விட்டான்; திருமேனி நடுங்கினான்.

இறந்த கன்றின் தாயாகிய அறிவுள்ள பசு அங்கு வந்தது. மானுடப் பெண்ணுக்குத் தன் குழந்தை மீது எத்துணை அன்பு உண்டோ, அதைவிட ஆயிரம் மடங்கு அன்பு பசுவுக்குத் தன் கன்றிடம் உண்டு. ஆதலால்தான் மாணிக்கவாசகர்,

உற்றாரை யான் வேண்டேன்
ஊர்வேண்டேன் பேர்வேண்டேன்
கற்றாரை யான் வேண்டேன்
கற்பனவு மினியமையுங்
குற்றாலத் தமர்ந்துறையுங்
கூத்தாவுன் குரைகழற்கே
கற்றாவின் மனம் போலக்
கசிந்துருக வேண்டுவனே

என்று பாடுகின்றார்.

தாய்ப் பசு தன் கன்றின் இளமையுடல் நொறுங்கி இறந்திருப்பதைக் கண்டு, பொறுக்க முடியாத துன்பம் கொண்டு இரத்தக் கண்ணீர் வடித்தது.

# வசீகரத்தையும், பெருமிதத்தையும் கொடுக்கும் நறுமணம் உங்களுக்கு பாமாலிவ் லவண்டர் டால்க் உபயோகிப்பதால்.

**உங்களுக்கு மிகவும் பிடித்தமான ஸெண்டுகள்—உங்களுக்காகவே மீண்டும் உருவாக்கப்பட்டிருக்கின்றன!**

ஒரு காலத்தில் உலக அழகுக் கேந்திரங்களிலி
ந்து இறக்குமதி செய்யப்பட்டவையும், உங்
களுக்கு மிகவும் பிடித்தமானவையுமான
ஸெண்டுகளின்றி இனி நீங்கள் தவிக்கவேண்
டாம்... இன்று பாமாலிவ் லவண்டர் டால்க்
ட்டுமே அளிக்கும் வசீகர நறுமணத்தினாலும்,
பருமிதத்தினாலும் உங்கள் உடலைச் சொகுசா
கப் பராமரிக்க முடியும். பாமாலிவ் லவண்
டரை உங்கள் உடம்பு முழுவதும் தூவிக்
கொண்டு, சூழ்ந்து நிற்கும் அதன் இனிய
வசீகர நறுமணத்தினால் களிப்படையுங்கள்.

**எப்பொழுதும் புத்துணர்ச்சியுடனும் நறுமணம் சூழ்ந்த அழகுடனுமிருக்க பாமாலிவ் லவண்டர் டால்க்.**




புதிய, நவீன காஸ்மெடிக் டின்!




மற்றும் பாமாலிவ் டால்க் டிலக்ஸ் —
மயக்கும் 17 ஸெண்டுகளின் அற்புதமான கலவை

.8 TAM.

# வீடுகளுக்கும் மற்றும் உணவு விடுதிகளுக்கும் ஓர் அரிய சாதனம்

# லீக்கோ நவீன வீட்டு எரி பொருள்

சிக்கனமானது • மற்ற எரிபொருள்களைவிட அதிக அனலை ஈந்து நீண்ட நேர வெப்பத்தை கொடுக்கிறது • புகையாதது • எந்தரக கரி அடுப்பினிலும் உபயோகப்படுத்தவல்லது.



சிறிய 'லீக்கோ' துண்டுகளை எடுத்துக் கொள்ளவும்.



பிறகு மெல்லிய அடுக்காக அடுப்பினில் பரப்பி வைக்கவும்.



வழக்கமான முறையில் எரிய வைக்கவும்.



சில நிமிடங்கள் கழித்து நன்றாக சுடர் விட்டவுடன் மேலும் வேண்டிய அளவு 'லீக்கோ' சேர்த்துக் கொள்ளவும்.

நெய்வேலி லிக்னைட்
கார்ப்பொரேஷன் லிமிடெட்,
நெய்வேலி-1.






FDS NLC 640 TM

''அம்மா, அம்மா'' என்று கதறியழுது மூர்ச்சித்து விழுந்தது. அந்தச் சத்தம் எண்திசைகளிலும் கேட்டது. இந்தக் காட்சியைக் கண்ட விதிவிடங்கனும் பசு தன் கன்றை நினைத்து எப்படி உள்ளம் உருகியதோ அப்படி உருகினன்!

''கெட்டேன், சிவபெருமானே! பெரும் பாவத்தைச் செய்து விட்டேன். அகிலாண்ட நாயகா! தேவரீரைச் சேவிக்க எண்ணிய நான் நடந்தல்லவா வந்திருக்க வேண்டும்? அரச போகத்தில் மதி மயங்கித் தேர் ஏறி வந்தது பெருந் தவறு. அப்பாவச் செயலால் இப்பசுங் கன்று மாண்டதே! குற்றமற்ற குலத்தில் பிறந்த நான் பசுவதையாகிய கொடும் பாவத்தைப் புரிந்து விட்டேன்! என் தந்தையின் அரசாட்சிக்குப் பெரும் பழியைத் தேடி வைத்து விட்டேன்! நமது சைவ வாழ்வு திருநீற்றில் அல்லவா இருக்கின்றது? எனில், அத்திருநீற்றைத் தருவது பசு அல்லவா? சைவத்தை வாழ்விக்கின்ற இந்தக் கன்று தேர்க்காலில் விழுந்து இறந்து விட்டதே! இனி நான் இவ்வுலகில் வாழ மாட்டேன். அடைக்கலம் புகுந்த ஒரு புறவுக்காக உடற்சதை யெல்லாம் அறுத்துத் தந்து தானும் துலையேறிய சிபியின் மரபில் வந்த நான், குலத்துக்குக் கொடும் பழி தேடி வைத்தேனே! இப்பழி பாவத்தினின்று எப்படிக் கரையேறுவேன்?'' என்றெல்லாம் கதறித் துடிதுடித்தான்.

''இளவரசே! வருந்த வேண்டாம். இந்தக் கன்றை நீங்களாக வேண்டுமென்று கொல்லவில்லை. கன்றுக்கு ஆயுள் முடிந்தபடியால் இத்தனை பேர் கண்களுக்கும் தோன்றாமல் வந்து தானே தேர்க்காலில் வீழ்ந்து மாண்டது. அதற்குத் தாங்கள் என்ன செய்ய முடியும்? எல்லாம் சிவன் செயல். இதற்காகத் தாங்கள் உயிரை விடுவது நியாயமாகாது. வேதம் படித்த அந்தணர்களைக் கண்டு அபுத்தி பூர்வமாய்ப் பசு இறந்தால் என்ன பிராயச்சித்தம் செய்வதென்று கேட்டு அதன்படி செய்துவிடலாம்'' என்று அமைச்சரும் ஆர்வலரும் விதிவிடங்கனிடம் கூறினர்கள். விதிவிடங்கனை அழைத்துக் கொண்டு விதிநூல்வல்ல பெரியோரிடம் சென்றனர்.

''இளவரசே! பன்னிரண்டு ஆண்டுகள் பசுத் தொழுவத்தின் தரையில் நீ படுத்திருக்க வேண்டும். பசு வெய்யிலில் இருந்தால் நீயும் வெய்யிலில் இருக்க வேண்டும். அவ்வாறு பிராயச்சித்தம் செய்தால் பாவம் நீங்கும்'' என்று அவ்வந்தணர் கூறினர்.

மனுநீதிச் சோழன் அரண்மனை வாயிலில் கட்டுக்காவல் இல்லாத இடத்தில் ஆராய்ச்சி மணி கட்டப்பட்டிருந்தது. குடிகளுக்குக் குறை ஏற்பட்டால் அரசனுக்கு அறிவிப்பதற்காக அம்மணி அங்கு கட்டி வைக்கப்பட்டிருந்தது. அந்த மணி கட்டிய நாள் தொட்டு இதுகாறும் யாரும் அந்த மணியை அடிக்கப் பிரமேயமே ஏற்பட்டதில்லை. இப்போது கன்றை இழந்து அழுகையுடனும் பரிதாபத்துடனும் ஓடி வந்த பசு தனது கோட்டால் அம்மணியைக் 'கணீர் கணீர்' என்று

## கணக்குத்தானே வேண்டும்?



சுமார் நாற்பது ஆண்டுகளுக்கு முன் 'போர்டு' ஸ்தாபனத்தாருக்கும் பத்தாயிரம் டாலர் பில் ஒன்று வந்தது. பில் தொகை அதிகமாகப் படவே, விவரங்கள் கேட்டார்கள் போர்டு ஸ்தாபனத்தார்.

பில் அனுப்பியவரோ ஜெர்மனியிலிருந்து அப்போதுதான் அமெரிக்காவில் குடியேறியிருந்த கணித மேதை சார்லஸ் பிராட்டியஸ் ஸ்டைன்மெட்ஸ். உலகப் புகழ் பெற்றவர் இவர். தகராறு செய்து கொண்டிருந்த ஒரு மின் உற்பத்தி இயந்திரத்தைச் சரி செய்யும் வேலையைத்தான் போர்ட் ஸ்தாபனத்தார் அவருக்குக் கொடுத்திருந்தார்கள். ஒரு நோட்டுப் புத்தகமும், பென்சிலும் படுக்க ஒரு கட்டிலும் வேண்டுமென்று கேட்ட ஸ்டைன்மெட்ஸ், இரண்டு பகல் இரண்டு இரவுகள் கட்டிலில் சாய்ந்த வண்ணம் இயந்திரத்தின் சப்தங்களை உற்றுக் கேட்டுக் கொண்டும், ஏதோ கணக்குகளைப் போட்டுக் கொண்டும் இருந்தார். பிறகு, ஓர் ஏணி மூலம் இயந்திரத்தின் மீது ஏறிச் சில அளவுகள் எடுத்து விட்டு, சாக்கட்டியால் இயந்திரத்தின் ஒரு பகுதியில் அடையாளக் குறியிட்டார். ''குறியிடப் பட்டிருக்கும் இந்த இடத்தில் இந்தத் தகட்டை அகற்றி உள்ளேயிருக்கும் பீல்டிங் காயிலிலிருந்து (Fielding coil) பதினாறு சுற்றுகளை (Windings) எடுத்து விடுங்கள்'' என்றார் ஸ்டைன்மெட்ஸ். அப்படிச் செய்ததும் நன்றாக இயங்கத் தொடங்கியது இயந்திரம்.

நாம் அனுப்பிய பில் சரியல்லவென்றும், முழு விவரங்களும் அடங்கிய பில் ஒன்று வேண்டுமென்றும் கோரித் தம்மிடம் கணக்குக் கேட்ட போர்டு ஸ்தாபனத்தினருக்கு ஸ்டைன்மெட்ஸ் அனுப்பிய 'விவரமான' பில் இதுதான்:

| | |
|---|---|
| சாக்கட்டியால் குறியிட்டதற்கு | 1 டாலர் |
| எங்கே குறியிடவேண்டுமென்று தெரிந்து கொண்டதற்கு | 9999 டாலர் |
| மொத்தம் | 10000 டாலர் |

ஆதாரம்: இன்டர்நேஷனல் மானேஜ்மெண்ட் தகவல்: டி. என். கிருஷ்ணன்

அடித்தது. 'பழிப்பறை முழக்கோ ? பாவத்தின் ஒலியோ? வேந்தன் வழித் திரு மைந்தன் ஆவிகொள்ள வரும் இயமனின் கழுத்தில் உள்ள மணியின் ஆர்ப்போ?' என்று யாவரும் துணுக் குற்று அஞ்சி ஏங்க அம்மணியின் ஓசை எங்கும் கேட்டது.

கருணையே ஒரு வடிவம் எடுத்தது போன்ற மனுநீதிச் சோழன் அம்மணி யின் ஒலியைக் கேட்டு நடுங்கி எழுந் தான். தனது வாழ்நாளிலேயே முதல் முறையாக ஆராய்ச்சி மணியோசை கேட்டுத் திகைத்தான் அவன்.

வெளியே ஓடி வந்தான். அமைச் சர்கள் அவனைச் சூழ்ந்து ஓடி வந்தனர். ஆராய்ச்சிமணி கட்டப்பட் டிருந்த இடத்தில் பசு நின்று கொண்டிருந் தது. கண்ணீர் சொரிந்தவண்ணம் கதறிப் பதறி நிற்கும் அப்பசு மணியை அடித்திருக்கும் என்று யாராலும் ஊகிக்க முடியவில்லை. அப்போது காவ லர்கள் மன்னரைத் தொழுது, "இப் பசு மணியை அடித்தது" என்று கூறினார்கள். அதனைக் கேட்ட மன்னன் அருகில் நின்ற அமைச்சர்களை இகழ்ந்து நோக்கினான். "இந்தப் பசுவுக்குத் தீங்கு செய்த பாதகன் யார்? ஏன் இது அழுகின்றது ?" என்று வினவினான்.

மன்னருக்கு ஆறுதல் ஏற்பட வேண் டும் என்று எண்ணி உள்ளதை உள்ள வாறு சொன்னார்கள் அமைச்சர்கள்.

**"வளவ!நின் புதல்வன் ஆங்கோர்**
**மணிநெடுந் தேர்மேல் ஏறி**
**அளவில்தேர்த் தானை சூழ**
**அரசுலாந் தெருவில் போங்கால்**
**இளையஆன் கன்று தேர்க்கால்**
**இடைப்புகுந் திறந்த தாகத்**
**தளர்வுறும் இத்தாய் வந்து**
**விளைந்ததித் தன்மை" என்றான்.**

'வளவ' என்பது, மாட்டு வளம், மனைவளம், நிலவளம் போன்றது. "மன்னவா! நம் ஊரில் ஆயிரமாயிரம் பசுக்கள் இருக்கின்றன. அவைகளில் ஒரேயொரு பசுவின் கன்றுதானே இப் பொழுது இறந்தது?" என்று ஒரு பொருள். இளவரசர் தேர்மீது போனார். என்று மட்டும் சொன்னால், "ஏன் இப்படி அவசரப்பட்டுப் போனான்?" என்று மன்னர் கோபம் கொள்ளலாம். வீதியை அடைத்துக் கொண்டு வான ளாவிய தேர் சென்றது. கன்றுக்குக் கண் தெரியவில்லை. இளவரசர் மீது தவறு இல்லை. கன்றுக்குட்டியின் தவறு தான் என்ற பொருள் எல்லாம் பாட்டினுள்ளே இருக்கிறது. இள வரசர் தன்னந் தனியாகவா போனார்? ஆயிரமாயிரம் யானைகள், குதிரைகள் அவ்வளவும் அல்லவா அவருடன் சென்றன? ஆகவே, இளவரசர் மீதா தவறு? ராஜவீதியில் பசு மாட்டுக்கு என்ன வேலை? இடையர் தெருவிலா இளவரசர் தேரை ஓட்டிச் சென்றார்? பாட்டில் உள்ள ஒவ்வொரு சொல் லுக்கும் இப்படி அழுத்தமான பொருள் இருக்கின்றது.

"கன்றுக்குட்டி மிகவும் சிறியது. அந்தக் கன்று இறந்ததால் தாய்ப் பசு வந்து மணி அடித்தது" என்று சப்பைக் கட்டுக் கட்டினார் மந்திரி.

அமைச்சரின் சொற்கள் வெந்த புண்ணில் விடந் தடவிய வேல் நுழைந் தாற்போல் அரசனுடைய செவியில் நுழைந்தது. கன்றிழந்த பசு எவ்வளவு துன்புற்றதோ, அவ்வளவு துன்பத்தை யடைந்தான் மன்னன்.

"என் அரசாட்சியில் இப்போது இப்படி ஒரு தீங்கு நேர்ந்து விட் டதே. இந்தப் பசுவின் கண்களில் அருவி போல் நீர் வருகிறதே. இதைக் கண்டும் இன்னும் என் உயிர் பிரிய வில்லையே.

'மணியசைத்தால் மன்னன் மனத் துயரை நீக்குவான்' என்று கருதித் தானே இப்பசு மணியடித்திருக்கின் றது? பசு உலக மாதாவன்றோ? சிவ பெருமானுக்குப் பஞ்சகவ்யம் தருவதும் பசுவேயன்றோ? சாதுவான உயிராகிய பசுவைக் கொல்வதற்காகவா நான் தவமிருந்து பிள்ளை பெற்றேன்? கோயி லுக்குப் போகிறவன் ஏன் தேர் ஏறிச் சென்றான்? சென்றவன் எச்சரிக்கை யாகச் சென்றிருக்க வேண்டாமோ? இப்பசுவின் துயரை என்ன செய்து ஆற்றுவேன் ?" என்று துடித்தான் மனுநீதிச் சோழன். (தொடரும்)

# சென்னையில் அகில உலகம்

அகில இந்திய உற்பத்தியாளர்களின் ஸ்தாபனத்தைத் தோற்றுவித்தவர் காலம் சென்ற பொறியியல் மேதை சர். எம். விசுவேசுவரையா அவர்கள்.

அந்த ஸ்தாபனத்தின் முயற்சியால் வரும் 1967ம் ஆண்டு ஜனவரி 22ம் தேதியிலிருந்து பிப்ருவரி 27ம் தேதிவரை சுமார் ஐந்து வார காலத்துக்குச் சென்னை நகரை ஒட்டிய வெளிப் பகுதியில் பிரும்மாண்டமான அளவில் அகில உலக வியாபாரத் தொழிற் சந்தை நடக்கவிருக்கிறது. இந்த மாபெரும் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக்கும் குழுவுக்கு லாலா ஹன்ஸ் ராஜ் குப்தா தலைவராகவும், கே. எஸ். ஜி. ஹாஜா ஷரீப் பிரதம இயக்குநராகவும், எச். பலராம் ராவ் பிரதம காரியதரிசியாகவும் பணியாற்றுகிறார்கள்.

நுங்கம்பாக்கம் பகுதியில் இயங்கி வரும் இந்த உலகச் சந்தையின் காரியாலயம், நடக்கவிருக்கும் வியாபாரத் திருவிழாவை முன்னிட்டுப் பல நாட்களாகவே சுறுசுறுப்பாக இயங்கிக்கொண்டு வருகிறது.

அதன் நிர்வாகிகளைச் சந்தித்து இந்த மாபெரும் காட்சியைப் பற்றிச் சில விஷயங்கள் சேகரித்தோம். ★





"இந்த வியாபாரத் தொழிற் சந்தை இந்தியாவில் இப்போதுதான் முதல் தடவையாக நடக்கிறதா?"

"அகில இந்திய உற்பத்தியாளர்கள் ஸ்தாபனத்தின் முயற்சியின் அடிப்படையில் ஏற்பாடாகியிருக்கும் இந்த அகில உலக வியாபார—தொழிற்சந்தை நம் பாரதத்தில் முதன் முதலாக நடக்கவிருக்கும் மாபெரும் தொழில் கண்காட்சியாகவே இருக்கும். இதற்குமுன் இரண்டு சந்தர்ப்பங்களில் தில்லியில் உலகக் கண்காட்சி நடந்தது. ஆனால் அவை அளவில் சிறியவை. வரும் ஜனவரி-பிப்ருவரியில் சென்னையில் நடக்க ஏற்பாடாகி வரும் இந்தத் தொழிற் கண்காட்சி பிரும்மாண்டமாகவே மூந்நூறு ஏக்கரா நிலப் பரப்பில் கம்பீரமாகக் காண்போர் வியக்கும்படி இருக்கும் என்று உறுதியாகவே கூறலாம்."

"இந்த வியாபார, தொழிற் சந்தையின் லட்சியம் என்ன?"

"'தொழில் வளமே நாட்டின் வளத்துக்கு அடிப்படை' என்ற குறிக்கோளை உடைய அகில இந்திய உற்பத்தியாளர்கள் ஸ்தாபனம், இந்த உலகச் சந்தை மூலம் நம் பாரதத்தின் உற்பத்தித் திறம் பற்றி உலகுக்கு எடுத்துச் சொல்லலாம் என்று நம்புகிறது. உலகின் பல பாகங்களிலிருந்து வந்து கூடும் உற்பத்தியாளர்கள், தொழில்ஸ்தாபனத்தார்கள் முதலியோர்களுடன் கலந்து பரஸ்பரம் மனம் விட்டுப் பேசும் இந்த வாய்ப்பினால் நம்முடைய தயாரிப்புக்களை லாபகரமாக எந்த எந்த வெளிநாடுகளுக்கு ஏற்றுமதிசெய்ய முடியும், நம் தொழில் வளத்துக்குத் தேவையான உபகரணங்களை எந்தெந்த நாடுகளிலிருந்து சுலபமான முறையில் இறக்குமதி செய்து கொள்ளலாம் என்று தெரிந்து கொள்ள முடியும். இதற்கான விசேஷ வசதிகளைப் பிரத்தியேகமாக இந்தக் கண்காட்சி அளிக்கிறது. 'இண்டர் நாஷனல் சர்க்கிள்' என்ற தனிப் பகுதியைச் சிருஷ்டித்து அங்கு தினசரி காலை வேளைகளில் பல்வேறு நாடுகளைச் சேர்ந்த தொழில் விற்பன்னர்கள் ஒன்றுகூடித் தத்தம் தொழில்களுக்கான தேவைகளைப் பற்றி விவாதிக்க வசதி செய்யப்பட விருக்கிறது.

"இந்தத் தொழிற் கண்காட்சி எப்படி அமைய ருக்கிறது?"

"முந்நூறு ஏக்கரா நிலப் பரப்பில் மூன்றில் ரு பாகத்தைக் கட்டடங்கள், கடைகள் தனியவற்றுக்காக உபயோகித்து மீதி டம் காற்றோட்டத்துக்காக விட்டு வைக்கப்படும். மத்தியில் நேருஜி ஞாப ார்த்தமாக தூந்து வளைவுகளைக் கொண்ட ற்றி ஐம்பத்துநாலு அடி உயர கோபுரம் ன்று எழுப்பப்படும். இந்தக் கோபுரத்தில் ண்பதடி உயரம் வரை பொதுமக்கள் போய் வர லிப்டுகள் உண்டு. எண்பதடி உயரத்தில் நின்று பறவைகள் போல் கீழே ரிந்து கிடக்கும் கண்காட்சியைக் கண்டு கிழலாம். கண்காட்சி முடிந்த பிறகும் இந்தக் கோபுரம் நிரந்தரமாக அங்கு ன்று கொண்டிருக்கும்.

திரமுள்ள பகுதி என்று இரண்டாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. இரண்டு கலை அரங்குகள் நிர்மாணிக்கப்படும்.

"போக்குவரத்தைக் கவனிக்கச் சென்னை சர்க்கார் இந்தச் சந்தர்ப்பத்தை யொட்டி நூறிலிருந்து நூற்றைம்பது வரை புதிய பஸ்கள் நகரத்திலிருந்து விடு வார்கள் என்று எதிர்பார்க்கப் படுகிறது. ரயில்வே இலாக்கா வையும் போதிய உதவி தரு மாறு கோரியிருக்கிறோம். கண் காட்சிச் சாலைக்குள்ளேயே நீண்ட தூரம் நடக்க முடியாத வர்களுக்குச் சிரமத்தைக் குறைப்பதற்கு டாக்ஸிகளை அனுமதிக்கவும் ஏற்பாடாகி யிருக்கிறது."

"பிரதான நுழைவிடத்தைத் தவிர இரண்டு தனி உட்புகும் வழிகள் உண்டு. ஏறத்தாழ நாற்பத்துமூன்று லட்சம் சதுர அடிகளில் பரவிக் கிடக்கும் இந்தத் தொழிற் சந்தையை ஒரு நாளில் பார்த்து முடித்து விடுவது என்பது நடக்காத காரியம். இரண்டு தடவைகளாவது வந்து போனால்தான் ஓரளவு முழுமையாகப் பார்க்கலாம். சுமார் மூவாயிரம் அடி நீளம் இரண்டாயிரத்து எண்ணூறடி அகலப் பரப்பில் வியாபிக்க விருக்கும் இந்தச் சந்தைக்கு இரண்டாயிரத் துக்கும் மேற்பட்ட 'ஸ்டால்கள்' வரவிருக் கின்றன. வியாபாரம் நடக்கும் பகுதி, வியாபாரமில்லாமல் கண்காட்சிக்காக மாத்

"இக் கண்காட்சியை ஒட்டி வெளி நாட்டவர் பலர் வருவார்களே! அவர்களுக்குப் போது மான ஜாகை வசதிகள் சென்னையில் கிடைக் குமா?"

"கிடைக்கும் என்று நம்புகிறோம். மேலே நாட்டுப் பாணியில் நகரத்தில் இயங்கும் ஹோட் டல்கள் நூறுநூறு படுக்கைகளையும் இத்



திய பாணியில் இயங்கும் பிரபல ஹோட்டல்கள் சில முந்நூறு படுக்கைகளையும், ஒதுக்க முன்வந்திருக்கின்றன. எதற்கும் முன்னேற்பாடாக நந்தனத்தில் உருவாகியிருக்கும் புதிய, பல மாடிக் கட்டடத்தையும் இந்தக் கண்காட்சி முடியும் வரை வெளி நாட்டவர்களுக்காக ஒதுக்க முடியுமா என்று அரசாங்கத்தைக் கேட்க நினைத்திருக்கிறோம். இந்த ஐந்து வார காலத்தில் தினசரி இரண்டாயிரம் வெளிநாட்டவர்களாவது சென்னை வந்து போவார்கள் என்று எதிர் பார்க்கப்படுகிறது.''

''இந்தக் கண்காட்சிக்கு இத்தனை பெரிய ஏற்பாடுகளைச் செய்துவிட்டு அதை ஐந்தே வாரங்களில் முடித்துவிடுவது அவசர நிகழ்ச்சியாகத் தோன்றவில்லையா? இதை மேலும் சில வாரங்கள் நீடித்து வைக்கக் கூடாதோ?''

''உலகத்தின் பல பாகங்களிலும் ஆண்டுதோறும் நூற்றுக்கணக்கான தொழிற் சந்தைகள் நடக்கின்றன. பல ஸ்தாபனங்களின் பிரதிநிதிகள் ஒன்றிலிருந்து மற்றொன்றுக்குத் தங்கள் தயாரிப்புக்களின் மாதிரிகளுடன் இடம் பெயர்ந்து கொண்டே இருக்க வேண்டும். இதனால்தான் இத்தகைய சந்தைகள் சில வாரங்களில் முடிந்தாக வேண்டியிருக்கிறது. இந்த இந்தியச் சந்தையைக்கூட டிசம்பர் மாதத்தில் நடத்துவதாகத்தான் முதலில் திட்டம். நம் டிசம்பர் மாத சீதோஷ்ண நிலை ஓரளவு வெளிநாட்டவர்களுக்கு உகந்ததாக இருக்கும். ஆனால் ஹாங்காங் நகரில் நடக்கவிருக்கும் சந்தைக்கும் டிசம்பர் மாதத்துக்கும் இடையே அதிக இடைவெளி இல்லாத காரணத்தாலும், ஹாங்காங்கில் வேலையை முடித்துக் கொண்டு பலர் இங்கு வர வேண்டியிருப்பதாலும் பாரத ஏற்பாட்டை ஜனவரி பிற்பகுதிக்குத் தள்ள வேண்டியதாயிற்று.''

''இந்தச் சந்தையில் எத்தனை வெளிநாடுகள் பங்கு கொள்ளும் என்று எதிர்பார்க்கப்படுகிறது?''

''இருபது நாடுகளுக்கு மேல் பங்கு கொள்ளலாம் என்று நம்பப்படுகிறது. நம் நாட்டிலும் அரசாங்கத்தைத் தவிர தனியார் துறையிலும் பலர் பங்கு கொள்ளவிருக்கிறார்கள். சென்னை அரசாங்கம் ஒரு லட்சம் சதுர அடி கோரியிருக்கிறது. மகாராஷ்டிர சர்க்கார் இருபத்தி ஐயாயிரம் சதுர அடி, மைசூர் பதின்மூவாயிரம், ரயில்வே இலாகா ஒன்றேகால் லட்சம் சதுர அடி கேட்டிருக்கின்றன. கனரக மின்சார தொழிற்சாலை முப்பதினாயிரம். ஹிந்துஸ்தான் மிஷின் டூல்ஸ் இருபதினாயிரம். கடந்த மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களில் சாதித்ததை விளக்கவும், ஆரம்பமாகவிருக்கும் நான்காவது திட்டத்தின் தேவைகள் குறித்தும் இந்தத் துறைகள் நல்ல விளக்கம் கொடுக்கலாம் என்று எதிர்பார்க்கப்படுகிறது.''

''வெளி நாடுகளிலிருந்து எந்தவிதமான அதிசயப் பொருள் இந்தச் சந்தைக்கு வரும் என்று சொல்ல முடியுமா?''

''அதைப் பற்றி இப்போது நிச்சயமாக ஒன்றும் சொல்வதற்கில்லை. ஆனால் அமெரிக்காவோ, ருஷியாவோ தங்கள் விண்வெளி ஆராய்ச்சி சாதனங்களைக் கொண்டு வந்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.''

''இந்தப் பொருட்காட்சி பெரிய அளவில் நிர்மாணிக்கப்படுகிறது என்பதற்காக நுழைவுக் கட்டணமும் அதிகமாகத்தான் இருக்குமோ?''

''அதுதான் இல்லை. அதிக அளவில் பொது மக்கள் இந்தக் கண்காட்சிச் சாலைக்கு வந்து போக வேண்டும் என்ற விருப்பத்தின் அடிப்படையில் நுழைவுக் கட்டணத்தைக் குறைத்தே வைத்திருக்கிறோம். வயது வந்தவர்களுக்கு ஐம்பது பைசா. குழந்தைகளுக்கு இருபத்தி ஐந்து பைசா.''

''வெளிநாட்டவர்களுக்கு இங்கு வேறு என்ன வசதிகளெல்லாம் உண்டு.''

''ஆயிரத்து ஐந்நூறு லைன்கள் கொண்ட ஒரு 'டெலிபோன் எக்சேஞ்சே' இங்கு உருவாகப் போகிறது. வெளிநாட்டு வியாபாரப் பிரதிநிதிகள் தங்கள் வியாபார சம்பந்தமாக உடனுக்குடன் தங்கள் தாய்நாட்டுத் தலைமைக் காரியாலயங்களுடன் பேசிக் கொள்ளலாம். வியாபாரத்தில் முடிவும் எடுத்துக் கொள்ளலாம்.

''அவர்கள் கொண்டு வரும் வியாபாரப் பொருட்களைப் பாதுகாத்து வைக்க இங்கே பிரத்தியேக வசதிகளெல்லாம் செய்யப்பட்டிருக்கின்றன.''

''பொதுத் தேர்தல் ஆண்டு என்பதன் காரணமாக இக் கண்காட்சியின் காலம் ஒத்திப்போடப்படுமோ?''

''இல்லை! இது ஒரு நாட்டின் கௌரவம் சம்பந்தப்பட்ட விஷயம். இந்தத் தேதிக்குப் பல நாடுகள் ஒப்புக் கொண்டு பங்குபெற ஆவல் தெரிவித்திருக்கின்றன. அதற்கான ஏற்பாடுகளையும் அவைகள் செய்ய ஆரம்பித்துவிட்டன. ஆகையால் இந்த உலக சந்தை குறிப்பிட்ட தேதிகளில் நடைபெறும்.''

''பொதுமக்களையும் பார்வையாளர்களையும் நகரத்திலிருந்து கண்காட்சி இடத்துக்கு ஏற்றிச் செல்ல ஹெலிகாப்டர்களை உபயோகப்படுத்தலாம் என்ற வதந்தி இருக்கிறதே?''

''அது சாத்தியமானதாகத் தெரியவில்லை! ஹெலிகாப்டர்கள் வாங்க அன்னியச் செலாவணி தேவை. பொதுமக்களுக்குச் சிரமம் இல்லாமல் சர்க்கார் டிரான்ஸ்போர்ட் பஸ்கள் உதவும் என்று நம்புகிறோம்.''

ஃ ஃ ஃ

இப்போதே ஒருகணம் இந்த உலகச் சந்தையை மனக்கண்முன் கற்பனை செய்து பார்க்கத் தோன்றுகிறது. அதிசயமூட்டும் அமெரிக்க சிருஷ்டிகளும், ஆச்சரியப் படவைக்கும் ருஷ்யத் தயாரிப்புகளும் நம் சிந்தனையைச் சிறைப்படுத்தினாலும் முதல் முதலில் நம் கவனத்தைக் கவரப்போகிறவர் நமக்கு நன்கு பழக்கமான நமது லோக்கடலை வியாபாரிதான்.

பல நாட்டுக் கொடிகள் பல வர்ணங்களில் பறப்பதற்குப் போட்டியாக நம் சைனாபஜார் ரிப்பன் கடைக்காரரும் அங்கு நமது கலர் ரிப்பன்களைப் பறக்கத்தான் விடுவார். பார்த்து மகிழ்வோமே! — மேஜு





COLGATE
All Purpose
TALCUM POWDER

மேற்கு ஜெர்மனியின் தலைநகர் பான். அங்கு பிரதமர் வீடும் ஜனாதிபதியின் வீடும் அடுத்தடுத்து உள்ளன. அண்டை வீட்டார்களான ஜனாதிபதி லூப்கேயும் பிரதமர் எர்ஹார்டும் முயலைப் பொறுத்தவரை மாறுபட்ட கருத்துடையவர்கள். முயலைக் கண்டதும் 'தீர்த்துக் கட்டு' என்பவர் எர்ஹார்ட். ''ஐயோ, பாவம்'' என்பவர் லூப்கே. முயல்களை, எர்ஹார்டுக்கு முன்னால் அதே வீட்டிலிருந்த பிரதமர் அடினவரும் வெறுக்கத்தான் செய்தார். ஆனால் எர்ஹார்ட்டைப் போல் கட்டுத்தள்ளும்படி உத்தரவிட அவர் துணியவில்லை. காரணம், பிரதமரின் வீட்டிலிருந்து துப்பாக்கிச் சத்தம் எழுவதைக் கேட்டு,

## ஒரு சோகக் கதை



மக்கள் ஏதோ புரட்சிதான் உருவாகிறது என்று நினைத்து விட்டால்....?

யார் என்ன நினைத்தாலும் சரி, கட்டுத்தள்ள வேண்டியதுதான் என்று தோட்டக்காரர்களுக்கு உத்தரவிட்டார் எர்ஹார்ட். ஆனால் புத்திசாலிகளான அந்த முயல்கள் தோட்டச் சுவரிலிருந்த ஓட்டைகள் வழியாகப் பக்கத்துத் தோட்டத்துக்குள் ஓடி ஜனாதிபதியிடம் அடைக்கலம் புகுந்து விட்டன. இடை இடையே எர்ஹார்டின் தோட்டத்துக்குள் புகுந்து தொந்தரவளித்தன. இதனால் லூப்கேக்கும் எர்ஹார்டுக்கும் இடையில் சதா சண்டை சச்சரவு !

அத்தனை முயல்களையும் டிசெம்பர் ஜனவரி மாதம் காணவில்லை. மைக்ஸோமாட்டோஸிஸ் என்னும் வியாதிக்கு இலக்காகி இறந்து விட்டன. முயல்களைக் குறித்த சண்டை இப்போது ஓய்ந்து விட்டது.

தகவல்: டி. என். கிருஷ்ணன்

ஆதாரம்: ஜெர்மன் இன்டர்நாஷனல்



## அசமந்தமே!

மனைவியைப் பார்த்து எரிந்து விழுந்தான் கணவன்:

''எதிர் வீட்டுக்காரி விதம் விதமாக உடுத்துகிறாள் என்று நச்சரித்தாயே! இப்பொழுது பார்த்தாயா, அவள் கணவன் ஓட்டாண்டியாகி நடுத் தெருவில் நிற்கிறான்!''

''அவன் உங்களுக்குப் பணம் ஏதும் தரவேண்டுமோ?''

''அதெல்லாம் இடையாது.''

''பின்னே, அவன் ஓட்டாண்டியாகி விட்டதற்கும், பட்டுச் சேலைகள் வாங்குவதற்கும் என்ன சம்பந்தம்?'' என்று சீறினாள் மனைவி.

—எம். எம். கே.

□—□—□—□—□—□—□—□—□

அப்பிரகாம் லிங்கன் மிகவும் உயரமான மனிதர். இதை அவருடைய நண்பர்கள் அடிக்கடி கேலி செய்வதுண்டு. அதுவும் லிங்கனுக்குக் கால்கள் மிகவும் நீளம். ஒரு முறை ஒரு நண்பர் இதைக் கேலி செய்வதற்காக லிங்கனிடம், ''லிங்கன்! பொதுவாகக் கால்கள் எவ்வளவு நீளமிருக்க வேண்டும்?'' என்று கேட்டார்.

''சாதாரணமாக இடுப்பிலிருந்து தரையைத் தொடும் அளவுக்கு இருந்தால் போதும்'' என்று பளிச்சென்று பதில் வந்தது லிங்கனிடமிருந்து.

— கேபியார்

## கேலியும் பதிலும்



## வெறும் கட்டை அல்ல!

அப்பா: ஏன்டா ! கழுதை மாதிரி ஊரைச் சுத்திண்டிருக்கே? காலாகாலத்திலே வீட்டிலே போய்ப் படியேன்டா! மூஞ்சியும் மொகரக் கட்டையும் பாரு!

விருந்தாளி: எனக்காக ஒன்றும் பண்ண வேண்டாம். நான் ஒண்டிக் கட்டைதானே? வத்தக் குழம்பு வச்சு, சாதம் வடிச்சா போதும்!

ஆசிரியர்: ஏன்டா, திருட்டுப் பய மாதிரி விழிக்கிறே? நானேக்கும் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லாமல் முழிச்சா மணிக்கட்டை உடைச்சுடுவேன்!

பெரியவர்: நான் அப்பவே அடிச்சுண்டேன், கேட்டாத்தானே? காலாகாலத்திலே, அவனுக்கு ஒரு கால் கட்டைக் கட்டி யிருந்தால் இப்படி நடந்திருக்குமா?

அம்மா: பிள்ளையாரே! என் பையனுக்கு வேலை கிடைக்கட்டும், உனக்குக் கொழுக்கட்டை நைவேத்தியம் பண்றேன்!

நாத்தனார்: அம்மா, மன்னி வையப்பாரேன், மரக் கட்டையாட்டமா நிக்கிறு.



## பணத் தட்டு !

பழனியம்பதியில் மாம்பழக் கவி சிங்க நாவலர் என்ற புலவர் ஒருவர் வாழ்ந் திருந்தார். அவர் கவி மாரி பொழியும் ஆற்றலுடையவர். இராமநாதபுரம் சேதுபதியாய் விளங்கிய செந்தமிழ்ப் புலவரும், புரவலரும் ஆகிய பொன்னு சாமித் தேவர் அவர்களைக் காணச் சென்றார்.

அரண்மனையில் பன்னுள் இருந்து தமிழ் முழக்கம் செய்தார். நாவல ருடைய தீஞ்சுவை மிக்க பாடல்களைக்



கேட்டு உளமகிழ்ந்த பொன்னுச்சாமி தேவர் தங்கத் தட்டு நிறையப் பொருளை வைத்து அளித்தார். வழக்கம் போல் தட்டில் உள்ள பொருள்களை மட்டும் கவிராயர் எடுத்துக் கொள்வார் என்று தான் எதிர்பார்த்தார் அரசர். மாம் பழக் கவிராயரோ, "பணத்தட்டு புலவருக்கா? அரசருக்கா?" என்று கேட்டார்.

பணத்தட்டு அரசருக்கு என்று சொன் னால் அரசருக்குக்கூடப் பணத் தட்டுப் பாடோ என்று அங்கு கூடியிருந்த மக்கள் நகைப்பார்கள். இதைக் கண்ட பொன்னுச்சாமித் தேவர் புலவரின் ஆற் றலை உணர்ந்து மகிழ்ச்சியால் சிரித்துக் கொண்டே "பணத் தட்டு புலவருக்கே இருக்கட்டும்" என்று கூறி அனைவரை யும் ஆனந்தத்தில் ஆழ்த்தினார்.

- அடந்தை பாண்டியன்

## கேள்வி - பதில்

"மின்சார ரயில் வண்டியில், ஒரு டிரைவர் மட்டுமே இருக்கிறார். வண்டி ஓடும்போது டிரைவருக்குத் திடீரென்று மயக்கம், மார்படைப்பு ஏதே னும் ஏற்பட்டு விட்டால், பிரயாணிகள் கதி என்ன?"

"மின்சார வண்டித் தொடரில் டிரை வர் எப்போதும் ஒரு கைப்பிடியைப் பிடித்துக் கொண்டுதான் இருக்க வேண் டும். வண்டி ஓடிக் கொண்டிருக்கும் போது, டிரைவருக்கு மயக்கமோ, வேறு உடற்கோளாறோ ஏற்பட்டு, கை நழுவி விடுமாகில், வண்டி தானாகவே நின்று போய் விடும்!"

- அ. சங்கரன்

## அதுவல்லவோ நாய் !

மிஸ்டர் அந்தோனி அந்த நாயைக் காசு எடுத்துக் கொண்டு போய்க் கடையிலிருந்து சுருட்டு வாங்கி வரப் பழக்கப்படுத்தி யிருந்தார். சில மாதங்கள் கழித்துத்தான் அவருக்கு ஒரு பெரிய உண்மை தெரிய வந்தது. அந்தப் புத்திசாலித்தனமான நாய் அவர் கொடுக்கும் அக்காசை அப் படியே கொண்டு போய் ரொட்டிக் கடையில் கொடுத்து "கேக்" வாங்கித் சாப்பிட்டு விட்டுச் சுருட்டைக் கடனில் வாங்கி வந்து கொண்டிருந்தது!

தகவல்:
மூ. க. தியாகராசன்

ஆதாரம்:
"டிட்பிட்ஸ்"





அனுதாபம்: இந்த வீட்டில் ஒரு பிரம்பு கட்டை இல்லாமப் போனது உங்களுக்கெல்லாம் எவ்வளவோ கஷ்டம்!

ஆறுதல்: நீ ஓர் அதிர்ஷ்டக் கட்டை! இல்லேன்னு, உன்னை விடக் குறைஞ்ச மார்க்கு வாங் கினவனுக் கெல்லாம் வேலை கிடைச்சுடுத்து. உனக்குக் கிடைக்காமல் போகுமா?

அடையாளம்: அவன்தான் அம்மா! கட்டை குட்டையா மூக்கும் முழியுமா இருப்பானே!







கருணை: மெதுவா பேசேன்! நாலரைக் கட்டைச் சுருதியிலே ஏன் கத்தறே?

உயரம்: இந்தக் காலத்திலே வர வேஷ்டி யெல்லாம் ஒரே அகலக் கட்டையான்னு இருக்கு!

கெடுதல்: நான் ஒரு நல்ல காரியம் செய்யப் போனேன்! அந்தப் படுபாவி நடுவிலே வந்து தெருக்கு முட்டுக்கட்டை போட்டமாதிரி நின்னுட்டான்!

— தஞ்சை ரமணி



## லட்கீ ஸஹ்யாத்ரீ கீ

ஸ்ரீ சாந்தாராம் பொதுவாகவே பாரதத்தின் மண் வளம் செழிக்கச் சிறந்த படங்களைத் தயாரித்து வருபவர். 'லட்கீ ஸஹ்யாத்ரீ கீ' என்னும் படத்தில் மராட்டிய மண் மணக்கிறது. ஹரிகதை செய்பவரின் மகன் அத்துறையில் நன்குபயின்று, இடிந்த கோயில் [ஒன்றைக் கட்டும் நல்ல நோக்கத்துக்காக நாடகக் குழு ஒன்றில் சேருகிறான். நாடகக் குழுவில் தலைவர் எல்லா வகையிலும் அவனுக்கு உதவுபவர் போல் நடித்து அவனைத் தம் கைப்பாவையாக்கத் திட்டமிடுகிறார். கடைசியில் அவருக்கு வெற்றி கிட்டவில்லை. அவன் கைங்கரியம் வெற்றி பெற்றுத் தன் மனத்துக்கிசைந்த மணாளனைப் பெறுகிறான். மேல்நாட்டு வலிப்பு நடனத்தைப் பழிக்கும் முறையில் ஸ்ரீ சாந்தாராம் ஒரு கல்லில் இரண்டு மாங்காய்கள் அடிப்பது அவருடைய ஆற்றலுக்குச் சான்று பகர்கிறது. ஆனால் படத்தின் வர்ணக் கலவை சாயம் போய் இளிக்கிறது. மராட்டிய மொழியில் எடுத்த படத்தை ஹிந்தியில் உதட்டு அசைவுகள் ஒன்று சேராமல் 'டப்' செய்திருப்பது அவசரக்கோலம் அள்ளித் தெளித்த கதையாகி யிருக்கிறது.

ஆயினும் இந்தப் படத்தில் மராட்டிய மணம் வீசுவதைப் பாராட்டத்தான் வேண்டும். சொல்லப்போனால் இந்தப் படத்தின் தோல்வி [கலைத் துறையின் வளர்ச்சிக்கு ஒரு வெற்றி என்றே கூற வேண்டும்.

## நாடோடி

'சாதிகள் இல்லையடி பாப்பா';— குலத் தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்!' என்றார் மகா கவி. ஆனால் தர்மலிங்கம் ஜாதிப் பித்தின் காரணமாகத் தியாகுவைக் குலத் தாழ்ச்சி சொல்லி, தியாகு — மீனா காதலைத் திரஸ்கரித்து, மூத்த மகள் மீனாவைத் தற்கொலையில் இழக்கிறார். அதோடு மட்டுமா? வேலைக்காரன் ஜம்புவைத் துச்சமாகப் பேசி, ஜெயிலுக்கு அனுப்பி, அவன் விரோதத்தையும் சம்பாதித்துக் கொண்டார். அதனால் சிறை மீண்டு வந்த ஜம்பு, தர்மலிங்கத்தின் இரண்டாம் பெண் ராதாவைக் கடத்திச் சென்று அவள் கண்களை 'டெம்பரரி' குருடாக்கிப் பழி தீர்த்துக் கொள்ளுகிறான். தியாகுவே குருடி ராதாவைக் காப்பாற்ற வருகிறான். அவனுக்கும் 'டெம்பரரி'க் குருட்டுப் பாக்கியம் கிட்டுகிறது. இவ்விரண்டு பேரும், 'குருடும் குருடும் குருட்டாட்டம் ஆடி'க் களித்துக் கடைசியில் ஒன்று சேருவதே இந்த 'நாடோடி'ப் படத்தின் கதை. இந்தக் குருட்டாட்டத்தில் எம். ஜி. ஆர். அவர்களைச் சரோஜா தேவி பாடாய்ப் படுத்துகிறார். அவளுக்குச் சாதம் ஊட்டுவதிலிருந்து பல கைங்கரியங்களை அவர் செய்ய வேண்டியிருக்கிறது. பைத்தியம், குருடு ஆகியோர் என்ன செய்தாலும், சொன்னாலும் பொறுத்துக் கொள்ள வேண்டியது தான்! என்ன செய்வது?

'ரசிக்கத்தானே இந்த அழகு — கொஞ்சம் ரசனையோடு வந்து பழகு!' என்ற ஆபாசமான பாட்டு சென்ஸார் கண்ணில் படாமல் போனது ஏனோ? குருட்டாட்டத்தில் அது மறைந்து விட்டதோ? நல்ல காலம்! பட வசனத்திலேயே, 'அந்த ஆபாசப் பாட்டைத் திரும்பவும் பாட வேண்டாம்' என்று எம். ஜி. ஆர். கேட்டுக் கொஞ்சம் ஆறுதல் அளிக்கிறார்.

வேலைக்காரன் ஜம்புவாக வரும் நம்பியாருக்கும், தர்மலிங்கமாக வரும் வி. கே. ராமசாமிக்கும் வேஷப் பொருத்தம் சரியாயமைந்துள்ளது. நாகேஷ் 'பிக்பாக்கெட்'டாக வந்து சக்கைப் போடு காக்காய் வலிப்புடன் போடுகிறார்.

எம். ஜி. ஆர். — சரோஜா தேவியின் 'குருட்டாட்ட'க்களிப்பு, அடி, குத்து, உதைக்குப் பஞ்சமில்லாத பாமர ரஞ்சகம் நிறைந்த இந்தப் படம் நன்றாக ஓடும்.







## ★ ★ ★ ★ அவன் பித்தனா?

'உலகத்தோடு ஒத்து வாழ்' என்பது பழமொழி. அப்படி வாழாதவனை உலகம் வேறு கண்ணோடு பார்க்கிறது. மறை கழன்றவன் என்றுகூடப் பட்டம் சூட்டி மகிழ்கிறது.

கலைஞர் கருணாநிதியின் கருத்தோவியம் இக்கருத்தையே சித்திரிக்கிறது. திரு ப. நீலகண்டனின் டைரக்ஷனில் திரையோவியமாக்கப்பட்டுள்ளது.

ஆளச் சொத்தும் சுதந்திரமும் கிடைத்ததும் அதை வைத்துக் கொண்டு ஆளத் தெரியாமல், ஏழைகளுக்கும் எளியவர்களுக்கும் வாரி வழங்கி மகிழ்ந்த குமாருக்கு இதுவும் வேண்டும், இன்னமும் வேண்டும். கைநீட்டி வாங்கிக் குறை தீர்ந்தவர்களே அவனைப் பித்தன் என்று கட்டிக் காட்டுகிறார்கள் என்றால், நீதியும் நியாயமும் திணறாமல் என்ன செய்யும்?

அரசியலுக்கும் சமூகத்துக்கும் அறிவுரை வழங்கும் கருத்தோவியமாகத் திகழ்கிறது இப்படம். அதற்கேற்ப உரைநடையும் எடுப்பாக அமைந்திருக்கிறது. அதனால் இத் திரைப்படம் பல இடங்களில் மேடைப் பிரசங்கத்தை நினைவுபடுத்துகிறது.

எஸ். எஸ். ஆரின் நடிப்பு அநுபவம்மிக்கதாகத் திகழ்கிறது. விஜயகுமாரி தம் பாத்திரத்தை உணர்ந்து நடித்திருக்கிறார். டி. எஸ். பாலையாவின் நடிப்பும் மெருகேறித் திகழ்கிறது. 'ஸஸ்பென்ஸ்' என்னும் ரகசியத்தைக் கையாள வேண்டிய இடங்களிலெல்லாம் ஏனோ தெரியவில்லை, கையை விரித்துவிட்டார்கள். நாகேஷின் நடிப்பை இன்னும் நல்ல முறையில் பயன்படுத்தியிருக்கலாம்.

## ★ ★ ★ ★ தாயின்மேல் ஆணை! ★ ★ ★ ★

அஷ்டமா சித்திகளையும் தன் வயப்படுத்த வேண்டும் என்னும் ஆசை வெறியில் ஒரு மந்திரவாதி இஷிணி உபாசனையில் ஈடுபட்டு ஒரு ராஜ்யத்தையே அழிக்கிறான்; மன்னனைக் கல்லாக்குகிறான்; பச்சிளங் குழந்தையான ராஜ குமாரனைக் கொல்லப் பல சதித் திட்டங்களைத் தீட்டி, முடிவில் தானே மேற்படி ராஜகுமாரனால் கொல்லப்படுகிறான்.

ஓ. ஏ. கே. தேவர் மந்திரவாதியாக வந்து அட்டகாசச் சிரிப்புடன் நன்றாக நடிக்கிறார். ஆனந்தன், கத்திச் சண்டையில் லாகவம் காட்டியிருப்பதோடு, தாயாரிடம் உருக்கமாகவும் நடித்திருக்கிறார். கே. ஆர். விஜயா ஆட்டு மந்தையின் தலைவியாக அறிமுகமாகிப்பிறகுகாட்டு ராணியாகத் திகழ்கிறார். இரட்டை வேடத்தில் அவர் நடிப்பு உயிர்பெறுகிறது. கண்ணீரில் அவர் நடிப்பு சிறப்பாய் வெளிப்படுகிறது. ராஜகுமாரியாக வரும் ராஜஸ்ரீ பருவ எழில் பகட்டாகத் தோன்ற நன்றாய் நடித்திருக்கிறார். மந்திரவாதியின் சீடனாகத் தோன்றும் நாகேஷின் நடிப்புக்கு மனோரமா ஈடு கொடுத்து நடித்து எல்லோரையும் சிரிக்க வைக்கிறார்.

விந்தியமலைக் குகையில் தன் உயிர்நிலையை வைத்துவிட்டுப் பல வாலிபர்களின் உயிரை வாங்கிய பண்டைக் காலத்து ராட்சஸன் கதையை எங்கிருந்து கண்டு பிடித்தார்களோ? தமிழ்ப் படங்களின் தரம் உயர்ந்து கொண்டு வருகிறது என்று சற்றுத் திருப்திப்பட்டுக்கொள்ள ஆரம்பித்திருக்கும் வேளையில், ஐயகோ, இப்படிப்பட்ட படங்களை வெளியிடுகிறார்களே, ஈதென்ன கொடுமை!

அடர்ந்த கானகமும், நெடுந்தூரத்துக்கு நெடுந்தூரம் பரவிக் கிடக்கும் குன்றுகளின் கூட்டமும் வெளிப்புறக் காட்சிகளில் அதிஅற்புதமாகத் தோன்றுகின்றன. ஆனால் மேற்படி இயற்கைக் காட்சிகளில் மனிதர்கள் யாரும் தலையைக் காட்டாமல் இருந்திருந்தால் எவ்வளவு நன்றாயிருந்திருக்கும்! அல்லது இவர்களையெல்லாம் வரவொட்டாதபடி செய்யும் மந்திர சக்தியாவது நம்மிடம் இருக்கக் கூடாதா?



# சோக்குமேழில் சோப்

வாடை யகற்றும்—நாற்றம் எழாமலேயே தடுக்கும்—தன்மையுள்ள அழகு சோப்பை உருவாக்க சோதனைக் கூடங்களில் நெடுங்காலம் சலியாது ஆராய்ந்ததன் நல்விளைவே ஒப்பற்ற ஜி-11* (ஹெக்ஸக்லோரோபீன்) அடங்கிய சிந்தால்: நறுமணம் கமழும் நல்லொழி தவழ, ஆரோக்கியப் புத்தெழில் மயமாக உங்களை விழித்தெழ வைக்கும் சொக்கு மெழில் சோப்பு.

ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் பிரபல சோப்புத் தயாரிப்பாளர்களால் உபயோகிக்கப்படும் ஜி-11 (ஹெக்ஸக்லோரோபீன்) கோத்ரெஜ் நிறுவனத்திற்கே உரித்தானது.

* எல். ஜிவாடன் எட்.ஸீ.எஸ்.ஏ. அவர்களின் ட்ரேட் மார்க்.




சோப்புகளிலும் சிலவகை அலங்காரப் பொருள்களிலும் உபயோகிக்கத்தக்க பரிபூரண வாடையகற்றியை அடையப் பல்லாண்டுகள் ஆராய்ச்சி செய்ததன் பலனை எய்தி மகிழுங்கள். முழு விஞ்ஞானத் தகவல்கள் வேண்டுமெனில், "ஜி-11 என்பது என்ன?" என்ற படவிளக்கமுள்ள இலவசப் புத்தகத்தைப் பெற இன்றே எழுதுங்கள்: கோத்ரெஜ், பம்பாய் 12.




*அதிககாலம் நீடித்திருப்பது, சிக்கனம் தருவது.*

**சிந்தால்** *யாவினும் மேல்.*

CT.24A- TAM

பதே! இப்போது அவர் கவலையெல்லாம் போட்டியாக முளைத்திருக்கும் 'வைத்தி ஜவுளிஸ்'ஸை எப்படிக் கவிழ்ப்பது என்பதுதான். அவர் ஒரு வழியாகப் போண்டாவை விழுங்கித் தீர்ப்பதற்கும், ''நாமும் அப்படியே செய்தாலென்ன?'' என்று ஆவுடையாப் பிள்ளை முடிக்கவும் சரியாக இருந்தது.

''எப்படி? என்ன செய்தாலென்ன?'' என்று சந்தேகம் கேட்கும் சாந்தலிங்கத்தை முறைத்துப் பார்த்தார் ஆவுடை.

## பிரச்னை ஒன்று தீர...

# இதோ ஒருகுறுக்

''ஹீக்!''

படித்துக் கொண்டிருந்த பேப்பரும், ஊதிக் கொண்டிருந்த சிகரெட்டும், பக்கமொன்றாகப் பறக்க உற்சாக மிகுதியால் ஆவுடையாப்பிள்ளை, துள்ளி, குதித்து, எழுந்து பக்கத்துச் சோபாவுக்குப் போனார். அதில் அமர்ந்து விழித்தவாறு இருந்த சாந்தலிங்கத்தின் முதுகில் பளாரென்று அறைந்து, ''நம்ம காலஞ்சென்ற சாஸ்திரி தாஷ்கண்ட் சந்திப்புக்குப் போனாரே'' என்று ஆரம்பித்தபோது.....

சாந்தலிங்கம் திருதிருவென்று விழித்தார். ''அந்த ஊரில் என்னவாம் விசேஷம்?'' என்று கேட்க நினைத்தும் முடியவில்லை என்றால் அதற்குக் காரணம் இரண்டு.

ஒன்று: வாயை நிறைத்திருந்த ஒரு முழு போண்டா வாய் திறக்கவொட்டாமல் தடுத்தது. இரண்டு: ''சுத்த கிணற்றுத் தவளைப்பா நீ'' என்று ஆவுடை கேலி செய்வாரே என்ற அச்சம்!

திரு சாந்தலிங்கத்துக்கு அரசியல் அவ்வளவாகத் தெரியாது. ஊரை ஸ்ரீராமன் ஆண்டாலும் சரி, ராவணன் ஆண்டாலும் சரி, அவருக்கு அக்கறையில்லை. அவர் கவனமெல்லாம், தமது வியாபாரமான 'சாந்தி டெக்ஸ் டைல்ஸ்' பிரமாதமாக நடக்க வேண்டுமென்

''போயும் போயும் உமக்குப் புத்தி சொல்ல வந்தேனே! என்னைத்தான் சொல்லணும்'' என்று அலுத்துக் கொண்டார். ''சரி, ஆரம்பத்திலிருந்தே வருவோம். உன் பிரச்னை என்ன?''

''எப்படியாவது பக்கத்துக் கடைக்காரனைக் கவிழ்க்கணும்.''

''காரணம் என்ன?''

''என்னப்பா, இப்படிக் கேட்கிறே?'' என்று ஆரம்பித்த சாந்தலிங்கம், தம் வயிற்றெரிச்சலைச் சொல்லி, ''நல்லா கூட்டம் சேர்ந்திருக்கிற நேரம் பார்த்து அவனோட ஆட்கள் சில பேரை அனுப்பி, நம்ம கடையில் இல்லாத ஏதாவது சரக்கைக் கேட்டு, 'பக்கத்துக் கடையிலேயிருக்கே! இங்கே விலை மலிவுன்னு வந்தா எல்லாம் மட்டச் சரக்காகவே இருக்கே!' என்று கூறச் சொல்லி அவமானப்படுத்தறான்'' என்றார்.

''ஊடுருவலா? சரி. அப்புறம்.''

''ஏன்டா இப்படிச் செய்யறேன்னு கேட்டால் சண்டைக்கு வரான். நடுரோட்டிலே நின்னு வாய்க்கு வந்தபடி பேசறான். மான நஷ்ட வழக்கு அது இது என்கிறான்.''

''முழு அளவு யுத்தமா! சரி, அப்புறம்?''

''அப்புறமென்ன? எப்படியாவது அவன் கடையில் நிலை வைக்கணும். அவ்வளவு தான்'' என்றார் சாந்தலிங்கம் ஆத்திரமாக.

"ஸ்ஸூ! தீயை வைக்கிறதா? அது என்ன இலேசுப்பட்ட காரியமா? பெரிய 'இல்லீகல்' வாச்சே! ஒரு வருஷத்துக்குக் குறையாமல் உள்ளே தள்ளி விடுவாங்கள்!"

"பேச்சுக்குச் சொன்னேம்பா!" பயந்து அலறி விட்டார் சாந்தலிங்கம். "என்ன இது? நீயே என்னைக் கொண்டு போய் உள்ளே தள்ளிடுவாய் போலிருக்கே!"



# வழி!

## ராஜேந்திரகுமார்

"நான் போய் அவன் வீட்டுப் படியை மிதிக்கணுமா?" ரோஷம் சாந்தலிங்கத்தின் மார்பை நிமிர்த்திற்று. "அவன் வரட்டுமே!"

"நீயும் அவன் வீட்டுக்குப் போக வேண்டாம். அவனும் உன் வீட்டுக்கு வர வேண்டாம்." ஆவுடை சொன்னார். "இரண்டு பேருக்கும் பொதுவான ஏதாவது ஒரு ஹோட்டலில் சந்திக்கலாம். இரண்டு பேருமாகச் சேர்ந்து பேசி ஒருத்தர் வியாபாரத்தை ஒருத்தர் கெடுக்காமல் பிழைக்கிற வழியைப் பாருங்க."

மறுத்துக் கூற வழியின்றி, விரல்களைச் சங்கடத்துடன் நெட்டுயிர்த்தார் சாந்தலிங்கம்.

பிரபல ஹோட்டலின் ஒதுக்குப்புறமான அறையொன்றின் சோபாவில் அமர்ந்திருந்த சாந்தலிங்கத்துக்குக் குளிர் கண்டது. அதற்குக் காரணம்



"சரி, சரி. அவன் உன் வழிக்கு வரக்கூடாது. அவ்வளவுதானே. அதற்கு நான் ஒரு பிரமாதமான ஐடியா வைத்திருக்கிறேன். திட்டம் தருகிறேன். நம்ம சாஸ்திரிஜி அன்று தாஷ்கண்ட் பேச்சுவார்த்தை நடத்தியதைப் போல, நீயும் வா, அவனையும் அழைப்போம். இரண்டு பேரும் பேச்சு வார்த்தை நடத்துங்க. சமரஸம் பண்ணி வைக்க நானாயிற்று." இப்படி ஆவுடையாப் பிள்ளை அவர்களது பிரச்னையைத் தீர்க்க முன்வந்தார்.

அந்த அறை குளுமை சாதனம் பொருத்தப்பட்டிருந்தது என்பது மட்டுமல்ல; தடபுடலான ஹோட்டலாக இருக்கிறதே, வாடகை, டிபன், காப்பி, சாப்பாட்டோடு பில் என்ன ஆகுமோ? அதை யார் தருவதோ...?

சுற்றுமுற்றும் பார்த்து அவர் விழிப்பதை உணர்ந்த ஆவுடையாப் பிள்ளை புரிந்து கொண்டார். "பயப்படாதேடா! ஹோட்டலுக்கான பில்தானே! நான் தரேன்" என்று கூறித் தேற்றினார்.

பத்து மணிக்கு வந்தார் வைத்தியலிங்கம்.

பரஸ்பர அறிமுகங்களுக்குப் பின் சந்திப்பைத் தொடங்கி வைத்துப் பேசலானார் ஆவுடையாப் பிள்ளை. "அரசியலில் மட்டுமின்றி, இப்படி இரண்டு போட்டி ஸ்தாபனங்களும் ஒன்றுபட்டு, திறந்த உள்ளத்தோடு பேசி, தகராறு இன்றி, சக வாழ்வோடு தொழில் புரிவார்களேயானால், நாட்டில் வியாபாரத் தொழில் போதுமான அளவு உயரக் கூடும். உங்களுடைய இந்த ஹோட்டல் சந்திப்பு வெற்றியடைய வாழ்த்துகிறேன். இந்தச் சந்திப்பு மூன்று நாட்களுக்குத் தொடர்ந்து நடைபெறும். முதல் நாளாகிய இன்று அடுத்த இரண்டு நாட்கள் பேசுவதற்கான அட்டவணையைத் தயாரித்து முடியுங்கள். அதோடு இந்த மகிழ்ச்சியான நாளை முன்னிட்டு இன்று இரவு என் வீட்டில் ஒரு விருந்து தரப்படும். வெங்காய சாம்பார் முதல் கொத்தமல்லி துவையல் வரை அயிட்டங்கள் உண்டு. அதோடு சாக்லேட் ஐஸ் கிரீமும் உண்டு" என்று முடித்தார்.

**ம**று நாள்...

போனைப் பிடித்துக் கொண்டிருந்த சாந்தலிங்கத்தின் முகத்தில் ஒரு படி அசடு வழிந்தது. "வந்து... நான் வரக்கூடிய நிலையில்லை!"

"நாசமாய்ப் போ!" டெலிபோனுக்குள் ஆவுடையாப் பிள்ளை துள்ளிக் குதித்தார். "அவ்வளவு தடபுடலாகப் பேச்சுக்களை ஆரம்பித்து வைத்தேனே, என்னைச் சொல்லணும். இந்தாப்பா! எப்படியாவது புறப்பட்டு வா. இல்லாவிட்டால் கேவலமாக நினைப்பான் வைத்தியலிங்கம். தெரிகிறதா? இரண்டாவது நாளே தோற்றுப் போய் ஓடிவிட்டாய் என்றும்? அதுவும் எவ்வளவு முக்கியமான விஷயத்தைப் பற்றிப் பேசப் போகிறாய் இன்று? எந்த ரக ஜவுளியை யார் விற்பனை செய்வது என்பது பற்றி முடிவு எடுக்க இருக்கிறோமே!"

"எனக்கு உடம்பு சரியில்லையே. வேணுமானால் என் மகனை அனுப்பி வைக்கிறேன். பேச வேண்டியதையெல்லாம் சொல்லி அனுப்பறேன். எனக்கு ரெப்ரெஸெண்டேடிவாக அவனே பேசட்டும்."

அவர் 'அப்பா ப்ளீஸ்...ஐயா ப்ளீஸ்' என்று கெஞ்சியபோது, "எதுவோ செய்" என்றார் ஆவுடையாப் பிள்ளை.

பத்து மணிக்கான கிரிக்கெட் மேட்சும், மூன்று மணிக்கான மாட்டினி ஷோவும் தவறிப்போன ஆத்திரத்தைக் கார் கதவைச் சாத்தும் முறையிலே காட்டிவிட்டு, ஹோட்டலின் 'ரிஸப்ஷனிஸ்ட்'டிடம் "மி பிளாக் காமே! அது எந்த 'ஹால்'லிலிருக்கிறது?" என்று பல்லைக் கடித்தபோது...

"என் கூட வா! நான் அழைத்துக் கொண்டு போறேன்!" என்ற குரல் கேட்டது. ஆவுடையப்பன் நின்றிருந்தார். "என்ன? தம்பி ரொம்பக் கோவமா யிருக்கிங்க போலிருக்கு! சந்திப்பின்போது, கோபம் கூடாதப்பா!"

"சந்திப்பாம் சந்திப்பு மண்ணாங்கட்டி." என்று ஸ்ரீராம் முணு முணுத்தபோது...

"இப்ப இப்படித்தான் சொல்லுவே. ஆளைப் பார்த்தாயோ அசையவே மாட்டே. வா... வா..." என்று இழுத்துப் போனார்.

"வணக்கம்."

அறைக் கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே நுழைந்த ஸ்ரீராம் ஆணியடித்தாற் போல நின்றுவிட்டான்.

தட்டினால் ரத்தம் கன்றிப் பரவுமோ என்பது போல் செக்கச் சிவந்த நிறம் அந்தப் பெண்ணுக்கு. கண்ணில் தீட்டிய மையின் கருமைக்கும், முகத்தில் ஒற்றிய பவுடரின் வெண்மைக்குமாக முகம் பளிச்சென்றிருந்தது.

"இவள்தான் ஷீலா." அறிமுகப்படுத்திவிட்டார் ஆவுடையாப் பிள்ளை. "உன் அப்பாவின் எதிரிக்கு ஒரே பெண்; செல்லப் பெண்."

பதில் வணக்கம் போடவும் மறந்து நின்ற ஸ்ரீராமுக்கு, அவள் சிரித்தபோது தலை 'கிர்' ரென்று சுழன்று நின்றது.

"அப்பாவுக்கு உடம்பு சரியில்லை" என்றான்.

"என் அப்பாவுக்கு வயிறு சரியில்லை" என்றாள் அவள்.

"உட்கார்ந்து பேசுங்கள்" என்று ஆவுடை நினைப்பூட்டினார்.

"பேசவும் வேண்டுமோ!" என்று நெடு மூச்செறிந்தான் ஸ்ரீராம். "இன்று பேசவேண்டிய விஷயம் என்ன?" என்று அவளைக் கேட்டான், அந்தக் குயில் குரலை மீண்டும் கேட்க.

"ஏன்? உன் அப்பன் சொல்லி அனுப்பவில்லையா?" என்று ஆவுடையின் கட்டைக் குரல் கேட்டதும், ஆத்திரம் ஆத்திரமாக வந்தது அவனுக்கு.

"வண்டி சொன்னார் வண்டி" என்று கையை விரித்துக் காட்டியவன் பொரிந்தான். "பேச்சு வார்த்தைகள் ஆரம்பமானவுடன் நீங்கள் போய் விடுவீர்கள் என்றுகூடச் சொன்னார்."

"அது அப்பன்கள் பேசும்போது." அசைய மறுத்தார் ஆவுடை. "பிறுசுகள் பேசும்போது நான் இருக்க வேண்டியது அவசியம்."

நூற்றெட்டுத் தரம் 'நாசமாய்ப் போக' என்று சபித்துவிட்டு, பேச்சுக்களைத் தொடர்ந்தான் ஸ்ரீராம். "உங்களுக்கு என்னென்ன புடவைத் துணிகள் பிடிக்கும்?"

"எனக்கா?" செயின் டாலரை உருட்டியவாறு சொன்னாள் ஷீலா: "டெரிலின், டெர்லான், டெக்ரான், நைலான், கம்பீனாக்கான பீயஸ்டா எல்லாம் ரொம்பவும் பிடிக்கும். ஜோலி என்றால் ட்விங்கிளிங் நைலான்தான் ரொம்பவும் பிடிக்கும்" என்றாள்.

"அப்படியானால் அதெல்லாம் உங்களுக்கே உரிமையாக இருக்கட்டும்" என்று அவன் கூறியபோது, "நோ, நோ" என்று அவசர அவசரமாக மறுத்தாள். "அதெல்லாம் உங்கள் கடையில் விற்பனையாகட்டும். எங்கள் கடையில் சாதாரண நூலும், பட்டும் விற்கட்டும்."

"பிடித்தமானது என்றீர்களே..." என்று ஆரம்பித்தவனை முறைத்துப் பார்த்து அடக்கி விட்டவள் கேட்டாள்: "உங்களுக்கென்ன பிடிக்கும்?"

"இம்போர்ட் செய்யப்பட்ட டெரிலின், டெரி காட்டன் துணியாலே 'டைட்ஸ்' பாண்டு போடுவதென்றால் உயிர். எனக்குச் சாப்பாடு கூட வேண்டியிருக்காது அரை டஜன் பருத்தி கலர் 'ப்ளீடிங் மெட்ராஸ்' இருந்துவிட்டால்."

## என்ன பெயரோ? □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □

''காலண்டர்'' என்று பெயர் வரக் காரணம் என்ன?''

''அதனுடைய 'காலம்' ஆனதும், 'டர்...டர்' என்று கிழித்து விடுவதால் அது காலண்டர்!''

கூறியது: கோவை ஸ்ரீ தியாகராசன்.

தகவல்: மணக்கால் லக்ஷ்மிநாராயணன்

---

''அந்தத் துணிக்கான உரிமை எங்களுக்கு'' என்றான் அவன் சட்டென்று.

''ஐயோ! அந்தத் துணிக்கெல்லாம் மார்க்கெட் அதிகம், ஆயிரம் சொன்னாலும் விடாதே என்றாரே, என் அப்பா.''

''சும்மாயிருங்கள்! ஏன் எங்கள் கடைக்கு வரவே மாட்டீர்களா?''

பளீரென்று பொறி தட்டியது போல நினைவு விழித்தது ஸ்ரீராமுக்கு.

'அட மடையா! உன்னை அடிக்கடி சந்திக்க வாய்ப்புத் தேடுகிறாளடா! அவள் தேவைக்காக உன் கடை ஏறி வரவும், உன் தேவைக்காக அவள் கடைக்கு நீ போகவும் வழி செய்கிறாளடா! மண்டு' என்று உன் மனம் இடித்துக் கூறியது.

பேச்சு வாக்கில் கவனித்தார்கள். சோபாவில் தொய்ந்து சாய்ந்து குறட்டை கட்டியம் கூற, தூங்கிவிட்டிருந்தார் ஆவுடை. பேச்சு திசை மாறி, சினிமா முதல் வகுப்பு லெக்சரர் உள்பட, வரப்போகும் கிரிக்கெட் மாட்ச் வரை அவர்கள் அலசத் தொடங்கினார்கள்.

''போயும் போயும் உன்னை அனுப்பி வேனே. என்னைத்தான் சொல்லணும்'' தலையிலடித்துக் கொண்டு துள்ளிக் குதித்தார் வைத்தியலிங்கம். ''நல்லா உன்னை ஏமாற்றியிருக்கான் அந்த ராஸ்கல். நல்ல ரகத்தை அவன் எடுத்துக்கிட்டு, மட்டச் சரக்கை உன் தலையிலே கட்டியிருக்கான்.''

''அவர் சொல்லலேப்பா! நான்தான் பிரித்தெடுத்தேன்! அவர் நல்லவரப்பா!''

''பேசாதே! எனக்குக் கோபம் வரும்! கிழட்டு ராஸ்கல் அவன்...''

''என்ன சொன்னீங்க கிழவனா? அவரா! நீங்களும், உங்க பார்வையும். முதல்லே உங்க மூக்குக் கண்ணாடியை மாற்றுங்க! புதுசா வாங்குங்க'' என்று நாலடி நடந்தவன் அப்படியும் ஆத்திரம் தீராமல் திரும்பி, ''சோடா பாட்டில் கண்ணாடியாக'' என்று கூறிப் போனான். பல்லைக் கடித்துக் கொண்டிருந்தார் வைத்தியலிங்கம்.

**ம**று நாள்......

ஹோட்டல் அறையில் இரண்டு 'லிங்கள்'களும் சண்டைப் பூனைகளைப் போல் கத்திக் கொண்டிருந்த அதே நேரத்தில்... கடற்கரையில்...

''டேய் மூர்த்தி! உனக்குத்தான் டிரைவிங் வருமே! என் காரை எடுத்து ஜாலியாக ஊரைச் சுற்றிவிட்டு ராத்திரி கொண்டுவந்து வீட்டில் விடு. நான் உன் சைக்கிளை எடுத்துப் போறேன்'' என்ற ஸ்ரீராம் அவன் பதிலையும் காதில் வாங்காமல் சைக்கிளில் ஏறி, மிதி மிதி என்று மிதித்துக் கல்லூரியைக் கடந்து, சைக்கிளில் போய்க் கொண்டிருந்த ஷீலாவை நெருங்கி, ''ஹலோ!'' என்றான்.

எதிர்பாராத சந்திப்பினால் வியப்பு தாங்காமல் தள்ளாடி விழப்போனவள் சமாளித்து ''நீங்களா?'' என்றாள்.

''எவ்வளவு நாளாயிற்று... உங்களைப் பார்த்து...'' என்ற ஸ்ரீராமைப் பார்த்து, கலீரென்று சிரித்தாள். ''நேற்றுத்தானே சந்தித்துப் பேசினோம் ஹோட்டலில்! ஒரு நாள்தானே ஆகிறது?''

''ஒரு நாள்தானா? ஒரு யுகாந்தரம் ஆகவில்லையா?'' என்றவாறு சிரித்தான் ஸ்ரீராம்.

அடுத்த அரை மணி நேரத்தில் கடற்கரை ஹோட்டலின் மேல் மாடியில் சளசளவென்ற அரட்டையுடன் டீயும், பிஸ்கட்டும், கேக்குமாகத் தின்று சிரிக்கச் சிரிக்கப் பேசினர்.

''ஆஹா! நான் ஒரு கவிஞனாகப் பிறக்கவில்லையே! பிறந்திருந்தால் உன் கன்னம் சிரிக்கும்போது குழிவிழுவதைப் பற்றி ஒரு பாமாலையே பாடியிருப்பேனே!''

''பாமாலை வேண்டாம்! முடிந்தால் ஒரு பூமாலைக்கு ஏற்பாடு பண்ணுங்கள். உங்களை எனக்கு ரொம்பவும் பிடித்து விட்டது.''

''அவ்வளவு சீக்கிரமாகவா என்மேல் நம்பிக்கை வந்து விட்டது? வந்து 'இது' பிறந்து விட்டதா?'' அவன் வியந்தான். ''நேற்றுத்தானே முதல் முதலாகச் சந்தித்தோம்! ஒரு நாள்தானே ஆகிறது?''

''நேற்றுத்தானா? ஒரு நாள்தானா ஆகிறது? யுக யுகாந்திரமாகவில்லையா?''

ஒரு விநாடி ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டவர்கள் 'கொல்'லென்று சிரித்தனர்.

''விஷயம் தெரிந்துதான் தேடப் புறப்பட்டவன், நேரே இங்கே வந்துவிட்டேன்.'' ஆவுடையா வந்து நின்றார். ''அப்பன்கள் அங்கே சண்டை போட, நீங்கள் இங்கே சிரிக்கிறீங்களா? அதுவும் நல்லதற்குத்தான். எப்படியோ சமாதானம் வந்தாலே எனக்குப் போதும். நேரமாச்சு, வீட்டுக்குப் போங்க. உங்கள் அப்பன்களிடம் பேசி உங்கள் கல்யாணத்தை முடிக்க நானாயிற்று. அதுவரையில் பொறுங்கள்'' என்று விரட்டிவிட்டு, நிம்மதியாய் அமர்ந்தார்.

''இப்படியொரு சமாதானம் வரணும்னு தானே அன்றைக்கு என் வீட்டிலேயே விருந்து கொடுத்தேன். அதுவும் ஐஸ்கிரீமோடு...அதுவும் ஸ்பெஷலாக சாக்கலேட் ஐஸ்கிரீமோடு'' என்று தமக்குத் தாமே வாய் விட்டுக் கூறிக் கொண்டார்.

''என்ன ஸார்? சாக்கலேட் ஐஸ்கிரீம் வேணுமா?'' என்ற ஸர்வர், அவர் ஏன் அப்படியோர் ஓட்டம் ஓடுகிறாரென்று புரியாமல் விழித்தான்.

# 14



எந்த மணத்தை நம் மனம் விரும்புகிறதோ, அந்த மணத்தை மனோரஞ்சித மலரிலே நுகரலாம். ஆனால் அதன் நெடிக்கு மயங்கிப் பாம்பு நாடுவதுண்டு. மடல் பெரிதான தாழையிலும் பாம்பு படுத்திருக்கும். தாமரை மலரோ சேற்றில் பிறந்திருந்தாலும் கதிரவனுக்கே முகம் மலர்கிறது. தன் பீடத்தில் கலைமகளை ஏந்தி நிற்கிறது.

கமலாவின் அன்பு மனோரஞ்சித மலரின் நெடியாக நாணுவுக்குத் தோன்றிற்று. வேலூரில் அவன் மீது கொண்ட பெருமைக்கும் உமிழ்ந்த வெறுப்புக்கும் ஈடு கட்டுபவள்போல் அவனிடம் ஆழ்ந்த அன்பு காட்டத் தொடங்கி விட்டாள் அவள். ஒவ்வோர் அசைவிலும் ஒரு குறிப்பை உணர்த்தினாள். ஒவ்வொரு பேச்சிலும் ஒரு சிரிப்பை மலர்த்தினாள். ஒவ்வொரு சிரிப்பிலும் தன் மனத்தை உலர்த்தினாள்.

அடிக்கடி லட்சுமி அம்மாளைப் பார்க்கிற வியாஜத்தில் அவள் வந்து போகலானாள். பொழுது போவது தெரியாமல் பேசிக் கொண்டிருந்து விட்டு, "நேரமாகி விட்டதே, நாணு, என்னை வீடு வரை கொண்டு விட்டு விடேன்" என்பாள். படிப்பில் கவனம் குறைந்து அவனுடைய நடவடிக்கைகளிலும், கருத்துக்களிலும் மனத்தைச் செலுத்தி அவனோடு விவாதம் செய்யலானாள்.

"அவன் நழுவி ஓடப் பார்ப்பான்...... விடாதே, கமலா!" என்பார் விசுவநாதன், விவாதம் சூடு பிடித்ததும்.

உண்மைதான். அவன் ஓடத்தான் விரும்பினான். ஓட முடியுமா என்கிற ஐயம் உள்ளூற. முடியாதோ என்கிற கவலை வெளிப்பட.

"ஓடட்டுமே...... பார்க்கலாம்" என்பாள் கமலா.

"ஓடத்தான் போகிறேன்" என்பான் நாணு.

"அது நடக்காது. நீ எங்கே ஓடினாலும் அங்கு வந்து உன்னை வளைத்துக் கொள்வேன். தெரியுமா?"

நாணு சிரிப்பான். அவனுக்கு அந்த உறுதி இருந்ததென்பது தெரிந்தது.

''ஏன் ஓட வேண்டுமோ தெரியவில்லை... கோழைகள்தான் ஓடுவார்கள்'' என்பாள் கமலா.

''நதி ஓடுகிறதே, அது கோழைத்தனமா?'' என்று கேட்பான் நாணு. பிறகு சொல்வான்: ''வாழ்வின் யாத்திரையில் தேக்கம் ஏற்படக் கூடாது, கமலா.... ஓடிக் கொண்டிருப்பதுதான் ஜீவநதிக்கு அழகு.''

'' அட, ராமா! இது என்ன? குழந்தை ஏன் இப்படிப் பேசுகிறான்?'' என்பாள் லட்சுமி அம்மாள்.

''சும்மா, பயப்படுத்துகிறான், லட்சுமி.... கல்யாணத்துக்கு முன்னாலே காசி யாத்திரைக்கு மாப்பிள்ளை புறப்படுவதாக ஐதீகம் இருக்கிறதல்லவா, அதற்கு என்ன அர்த்தம் சொல்லேன்.''

''இவன் ஏதோ மனசில் வைத்துக் கொண்டு பேசுகிறாப் போல் இருக்கிறதே!''

''சரிதான்.... நீயும் பயந்து விட்டாயா?''



# யாத்திரை

ஏ.எஸ்.ராகவன்

லட்சுமி அம்மாளுக்குப் பயம்தான். நாணுவிடம் ஒரு மாறுதல், தீர்மானமான மாறுதல் ஏற்பட்டிருந்ததை அவள் கண்டாள். கமலாவுடன் பழகத் தொடங்கிய புதிதில் அவன் உற்சாகமாகவே இருந்ததையும் வர வர அந்த உற்சாகம் தேய்ந்து வேதனையே வடிவானதையும் அவள் தெரிந்து கொண்டாள்.

"ஏன், கமலா, அவன் முன்போல் இல்லை! அப்படித்தானே?" கமலாவையே கேட்டாள்.

"வேலூரில் தெருத் தடியனோடு சுற்றிய நாணுவா என்றிருக்கிறது! எத்தனை ஆச்சரியமாக மாறி விட்டான்!"

"அதைக் கேட்கவில்லை, கமலா! உன்னிடம் அவன் பிரியமாக இருக்கிறானா என்று."

"அத்தை, நீங்கள் என்ன கேட்கிறீர்கள்?"

"உனக்குப் புரியவில்லையாடியம்மா?"

கமலா தலையைக் குனிந்து கொண்டாள். அவளிடம் அவன் பிரியமாகத்தான் இருக்கிறான். அப்படித்தான் அவள் எண்ணுகிறாள். இப்போதுதான் அந்த விசாரணை, அதாவது அவன் அவளிடம் பிரியமாக இருக்கிறானா இல்லையா என்பது பற்றிய ஆராய்ச்சி எழுகிறது, லட்சுமி அத்தை கேட்ட பிறகு. அவளுக்கு என்னவோ போலிருந்தது. இத்தனை நாட்களும் தன் அன்பை, தன் மனத்தைத் தான் அவள் ஆராய்ந்து கொண்டிருந்தாள். ஓட வேண்டும் என்றுனே, அதற்கு வேறொரு பொருள் இருக்கிறது என்கிற உண்மையை இப்போதுதான் முதன் முதலாக அவள் கண்டாள். மின்னலைக் காண்பதற்குக் கண நேரம் போதாதா?

லட்சுமி அம்மாள் அவளைப் பரிதாபமாகப் பார்த்துவிட்டு வேதனையோடு உள்ளே சென்று விட்டாள்.

மணி ஒன்பது. கமலா புறப்பட்டாள்.

"நாராயண், அவளை வீட்டில் கொண்டு போய் விட்டு வா" என்றார் விசுவநாதன் வழக்கம் போல.

"வேண்டாம்.... நான் தனியே போய்க் கொள்வேன்" என்றாள் அவள்.

நாணுவுக்கே இந்தப் பதில் வியப்பாக இருந்தது.

விசுவநாதன் திடுக்கிட்டுப் போனார்.

"நீ போவாய். இந்தக் காலத்தில் ஆண்களைவிடப் பெண்களுக்குத்தான் துணிச்சல் அதிகம். ஆனால் அதைப் பார்த்துக் கொண்டு நான் சும்மா இருக்க முடியுமா?" என்று கேட்டான் நாணு.

விசுவநாதன் நாணுவையும் எதிரே நிற்கும் பெண்ணையும் மாறி மாறிப் பார்த்துவிட்டுச் சொல்ல வேண்டியவை நிறைய இருக்க, ஒன்றும் சொல்லாமல் எழுந்து தம் அறைக்குப் போனார்.

கமலா புறப்பட்டு விட்டாள்.

"கமலா, இரு! நான் வருகிறேன்" என்றான் நாணு.

அவள் நின்றாள். "வேண்டாம்" என்று மறுக்கத்தான் விரும்பினாள். ஆனால் ஏனோ

இருவரும் நடந்தனர். வழி நெடுகச் சளசளவென்று பேசுவாளே கமலா, அன்று ஒரு வார்த்தை பேசவில்லை. நாணு பேச விரும்பினான். அவளிடம் தன் மனத் துயரையெல்லாம் சொல்ல விரும்பினான். ஆனால் அதற்கு வாய்ப்பே கிடைக்காமல் போயிற்று. வீட்டை அடைந்ததும், "மிக்க நன்றி, நாணு!" என்றாள் அவள்.

"எதற்காக? துணை வந்ததற்கு நன்றி சொல்வதானால், அப்புறம் நன்றிக் கணக்கு பெருகிப் போகும்" என்றான் அவன்.

"பெருகாமல் இருப்பதற்குத்தான் உடனுக்குடன் **வரவு** வைக்கிறேன்" என்றாள் கமலா, மனத்தை அழுத்திக் கொண்டு.

அவன் சிரித்தவாறே, "உடனுக்குடன் எல்லாப் பற்றுக்களுக்கும் வரவு வைக்க முடியாது, கமலா!" என்றான்.

அவள் பெருமூச்சு விட்டாள்.

"உன்னுடன் நிறையப் பேச விரும்புகிறேன். நாளைக்கு வருவாயா?" என்று கேட்டான் நாணு.

"நாளைக்கா?... ஊஹூம்... நிறையப் பாடங்கள் இருக்கிறது. பரீட்சை வேறு."

"அப்படியானால் என்றைக்கு வருவாய்?"

"அதைச் சொல்ல முடியாது, நாணு.... நான் இனிமேல் வர மாட்டேன்."

நாணு திகைத்து விட்டான். ஒரு வகையில் அவன் விரும்பியது அதுதான் என்றாலும் அவளாகவே அந்த முடிவை ஏற்றது அவனுக்கு வியப்பாக இருந்தது. ஒரு வேளை தோல்வியாகவும் இருந்ததோ! அல்லது ஏக்கம்தானோ!

"ஏன் வரமாட்டாய் கமலா?" கேள்விக்குள் அவனுக்கே விளங்காத பாசம் புகுந்தது.

"நான் எதற்காக வர வேண்டும்?" திருப்பிக் கேட்டாள் அவள்.

"எதற்காகவா! இதென்ன கேள்வி? எனக்காக மட்டும்தான் நீ வர வேண்டுமா? அத்தை இல்லையா? மாமா இல்லையா? பாப்பாக் கண்ணு உன் மீது உயிராக இருக்கிறாளே, அவளுக்காக நீ வரக் கூடாதா?"

"நாணு, தயவுசெய்து போய் வருகிறாயா?"

"கமலா!"

"நீ போகலாம்."

பட்டென்று கதவைத் தாளிட்டுக் கொண்டு விட்டாள் கமலா. நாணு ஒரு கணம் அங்கேயே நின்றான். வேலூரின் பழைய கதை திரும்பி விட்டது மீண்டும். ஆனால் அந்த மீட்சிக்கு அடிப்படைக் காரணம் என்னவென்றுதான் அவனுக்கு விளங்கவில்லை.

திரும்பும் வழியெல்லாம் விடையைத் தேடிய நாணுவுக்குப் பெண் மனம் என்பது ஒரு பெரும் புதிர் என்பது மட்டுமே தெரிந்தது. அவளிடம் வெள்ளம் போலப் பாய்ந்த அன்பு ஒரு நொடியில் தானாக வடிந்தே விட்டது. அந்த வெள்ளத்துடன் அமிழ்ந்து போகாமல் நீந்துவது எவ்வாறு என்று திகைத்தவனுக்கு, இப்போதோ நீரின்று வெளிப்படுத்தப்பட்ட மீனின் நிலை. தன்னுடைய

டாளா? கமலா வர மாட்டாள் என்பதே அவனால் தாங்க இயலாத வேதனையாய் விட்டது.

"கமலா திடீரென்று பேசாமடந்தையாகி விட்டாளம்மா" என்றான் நாணு லட்சுமி அம்மாளிடம்.

"ஏன்?" என்று கேட்டாள் அவள், ஒன்றுமே தெரியாதவள்போல.

"அதுதான் எனக்குப் புரியவில்லை."

லட்சுமி அம்மாள் சிரித்தவாறே, "உனக்கு எதற்காகப் புரிய வேண்டும்?" என்று கேட்டாள்.

"அம்மா!"

"அவளை நீ புரிந்துகொள்ளவில்லை. உன்னை அவள் புரிந்து கொண்டு விட்டாள். பெண்களுக்கு இதிலெல்லாம் அறிவு அதிகம்."

அவன் விழித்தான். உண்மையாகவே ஒரு பெண்ணால் ஓர் ஆணின் மனத்தை அவ்வளவு விரைவில் கண்டு கொள்ள இயலுமானால் அது ஆச்சரியம்தான்!

"என்னவோ, நாம் நினைக்கிறதெல்லாம் நடக்கிறதா? அந்தப் பெண் இனிமேல் இங்கு வருவாளென்றுகூட எனக்குச் சந்தேகமாக இருக்கிறது."

"வரமாட்டாளா, அம்மா?"

"போடா, அசடு.... என்னை எதுவும் கேட்காதே.... போ."

நாணு அதிர்ந்து போனான். "போ" என்று அவனை முதன் முறையாக அன்றுதான் அவள் சொல்லியிருக்கிறாள்.

அறைக்குள் நுழைந்தவன் உட்கார்ந்தான். சன்னல் வழியே தெரு மூலையையே பார்த்தான். மூன்று வீதிகள் கூடிப் பிரியும் இடம் அது. மூன்றும் மிக முக்கியமான

தெரிந்து விடுமாமே.... அம்மா சொல்கிறேன். கமலா, உன் அப்பா என் மீது உயிராக இருந்தார் என்று நீ பொறாமைப்பட்டாயே, அந்தக் காரணத்தைத்தான் இப்போதும் சொல்கிறேன். ஒருவர் மீது உயிராக இருப்பது எப்படித் தவறாகும் என்று கேட்காதே.... சுந்தரியின் பிள்ளை என்று பொறாமைப்படுகிற தகுதி தரப்படவில்லை.... ஏன் கமலா? உனக்குப் புரிகிறதா?.... ஐயோ, அப்படி ஏதும் — ஊஹூம்.... இராது....

"தீராத ஒரு சுமைதான் என் நெஞ்சில் கனக்கிறது. ஒரு தலையன் காக்கக் கூடாத பாரம் இது.

"தவிரவும் காதலை நான் நம்பவில்லை, கமலா. உலகில் அப்படி ஏதும் இல்லவும் இல்லை. அம்மா சொல்லியிருக்கிறேன். நீயே முன்பு சீதாவிடம் என்ன சொன்னாய், நினைவிருக்கிறதா? 'காதல் என்பது துயரங்களின் பிறப்பிடம்' என்று.

"ஆனால் கமலா, நீ இங்கு வராமல் இருக்கக் கூடாது. உன்னைப் பார்க்காமல் என்னால் இருக்க முடியாதம்மா. அப்படி நேர்ந்தால் நான் ஓடி விடுவேன்."

நாணு காலையில் கண் விழித்துக் கீழே வந்த போது மணி எட்டு ஆகியிருந்தது. வேலூரில் ஒரே ஒரு முறை இவ்வளவு நேரம் அவன் படுக்கையில் கிடந்திருக்கிறான். அது நடந்த பின்னர் அவனும் அங்கு தங்க முடியாமல் போயிற்று.

அதே போல் ஆகுமோ இங்கும்?

"தூங்கினாயோ இல்லையோ?" என்று கேட்டாள் லட்சுமி அம்மாள்.

"இல்லை" என்றான் நாணு.



# வெற்றித் திருநகர்

## அகிலன்

### அத்தியாயம் பதினெட்டு

## தண்டனை கிடைத்தது!

கரங்களில் விலங்கோடு நாகம நாயக்கர் சபைக்கு அழைத்து வரப்படுவார் என்று எதிர்பார்த்தார்கள் சபையில் கூடியிருந்த அமர நாயக்கர்கள். சாளுவ நரசிம்மர் நாகமரைச் சபைக்கு அழைத்து வந்தபோது அவர் கரங்களில் விலங்கில்லை. அந்தக் காட்சியே மற்ற அனைவருக்கும் வியப்பளித்தது.

சக்கரவர்த்திக்குத் தமது வணக்கத்தைச் செலுத்தி விட்டு, குனிந்த தலை நிமிராது நின்று கொண்டிருந்தார் நாகம நாயக்கர். கிருஷ்ண தேவராயரின் ஆணைப்படி அமைச்சர் சாளுவ நரசிம்மரே நாயக்கர்மீது சாட்டப் பெற்றிருந்த குற்றங்களைப் படித்தார்.

''சந்திரசேகர பாண்டியருக்குத் துணையாகப் படைகளோடு [சென்று, அவர்களுக்கு வீரசோழனிடமிருந்து நாட்டை மீட்டுக் கொடுக்க வேண்டுமென்ற சக்கரவர்த்திகளின் ஆணையை நீங்கள் மீறியிருக்கிறீர்கள். இரண்டாவது முறையாகப்]பாண்டிய நாட்டுத் தூதுவர் அப்துலின் வாயிலாகச் சக்கரவர்த்திகள் அனுப்பிய

ஓலையையும் நீங்கள் பொருட்படுத்தவில்லை. கடைசியாக விஜய நகரத்திலிருந்து படைகளோடு வந்த விசுவநாதனை எதிர்த்தும் நீங்கள் போரிட்டிருக்கிறீர்கள். விசுவநாதனை எதிர்க்கத் துணிந்தது சக்கரவர்த்திகளையே எதிர்ப்பதற்கு ஒப்பானது என்பதும் தங்களுக்குத் தெரியாததல்ல. வேண்டுமென்றே திட்டமிட்டுச் செய்யப்பெற்ற இராஜத் துரோகக் குற்றம் இது. சாம்ராஜ்யத்தின் முக்கியமான பொறுப்புக்களை வகித்துள்ள உங்களுக்கு இந்தக் குற்றத்துக்கான தண்டனை என்ன வென்பதும் தெரிந்திருக்கும்.''

குற்றச்சாட்டுக்கள் கொண்ட ஓலையைச் சாளுவ நரசிம்மர் சபையில் படித்துக் கொண்டு வந்த போது, அவருடைய குரல் அவ்வப்போது தழுதழுத்தது. தொண்டையை அடைத்துக் கொண்டு வந்தது அமைச்சருக்கு. சொற்கள் இடையில் தடுமாறின.

நாகம நாயக்கர் ஏதும் மறுமொழி கூறவில்லை. மறுமொழி கூறுவதற்கே அதில் ஏதுமில்லை என்பது போலவும் குற்றச்சாட்டுக்களை அப்படியே ஏற்றுக் கொள்வது போலவும் அவர் சிலையாக நின்றார். குனிந்த தலை நிமிரவில்லை.

''உங்களுடைய மறுமொழி என்ன?'' என்று கேட்டார் சக்கரவர்த்தி.

''குற்றச்சாட்டுக்களை அப்படியே நான் ஏற்றுக் கொள்ளுகிறேன். எல்லாமே உண்மையான குற்றச் சாட்டுக்கள். சக்கரவர்த்திகளிடம் நான் ஒரே ஒரு வேண்டுகோள் மட்டும் விடுக்கிறேன். இந்தக் குற்றங்களுக்கு மரண தண்டனை விதித்தால் அது சக்கரவர்த்திகள் காட்டும் கருணையாகும். நான் இனியும் உயிர் வாழ்ந்தால் இந்த உயிரே எனக்குப் பெருஞ் சுமையாக மாறிவிடும். இத்தனை ஆண்டுகளாக ஒரு குற்றமும் செய்யாமல் இந்தச் சாம்ராஜ்யத்துக்குப் பணி செய்ததற்காக, நான் விரும்பும் தண்டனையை எனக்கு அளிக்க வேண்டுமென்று சக்கரவர்த்திகளிடம் மன்றாடுகிறேன்.''

விசுவநாதனுக்கு அந்தச் சபையில் இருப்பது, பற்றி எரியும் பொருநெருப்புக்கிடையில் இருப்பது போல் தோன்றியது. அரியநாத முதலியாரும் நாகம நாயக்கரின் வேண்டுகோளைக் கேட்டுத் திகைப்புற்றார். மரண தண்டனைக்குக் குறைந்த எதையுமே அவர் ஏற்கச் சித்தமாக இல்லை.

''ஆணை மீறியதற்குக் காரணம் என்ன?'' என்று கேட்டார் சக்கரவர்த்தி.

''சந்திர சேகர பாண்டியரால் பாண்டிய நாட்டை அடக்கி ஆள முடியாது என்று நான் நம்புகிறேன். பாண்டிய நாட்டில் அங்கங்கே தனித்தனியே பலர் கலவரம் செய்து வருகிறார்கள். போட்டிகளும் பொறாமைகளும் உள்நாட்டுக் குழப்பங்களும் அங்கே மலிந்திருக்கின்றன. நாட்டைப் பாண்டியரிடம் விட்டு வந்தால் மீண்டும் அது அவரிடமிருந்து பறிபோய் விடும் என்று நினைத்தேன். இப்போதுகூட விசுவநாதனுடைய படைத் தலைவர்கள் அங்கே விழிப்போடு இருக்கும் வரையில்தான் அமைதி நிலவும்.''

சக்கரவர்த்தி கிருஷ்ணதேவராயர் சந்திரசேகர பாண்டியர் பக்கம் திரும்பினார்.

''ஆமாம், நாகம நாயக்கர் கூறுவது மெய்தான். அதற்காகவே அவரை எனக்குத் துணையாக இருக்கும்படி வேண்டினேன். அவர் எனக்குத் துணையாக இல்லாமல் பகைவராக மாறி விட்டார். என்னை ஒதுக்கிவிட்டு அவரே ஆளத் தொடங்கி விட்டார்.''

''சக்கரவர்த்திகளே! இந்தப் போரில் நான் பெரும் பொருள் இழந்து விட்டேன். சாம்ராஜ்யத்தின் சார்பில்



நடந்த போர்தான் என்றாலும், அதற்காக நெடு நாட்கள் சேமித்து வைத்திருந்த என் கைப் பொருளையெல்லாம் இதில் இழந்து விட்டேன். இழந்த பொருளைப் பாண்டிய நாட்டிலிருந்தே மீட்டுக் கொள்ள வேண்டு மென்று தோன்றியது. பிறகு, நானே எனக் காகவும் எனனுடைய ஒரே குமாரன் விசுவ நாதனுக்காகவும் அந்த நாட்டைக் கைப்பற்றி ஆளத் துணிந்தேன். குற்றம் என்பது தெரிந்து தான் குற்றம் புரிந்திருக்கிறேன். அதற்காக நான் இப்போது மிகவும் வருந்துகிறேன்.''

''வருந்துகிறீர்களா?'' என்று வியப் போடு கேட்டார் சக்கரவர்த்தி. சாளுவ நரசிம்மர் இடுக்கிட்டு நாகமரைத் திரும்பி நோக்கினார்.

''சக்கரவர்த்திகள் நேற்று விசுவநாத னுக்காக நடத்திய விழாவைச் சாளரத்தின் வழியே பார்க்கும் வாய்ப்புக் கிடைத்தது. சக்கரவர்த்திகள் பேசியதையும் கேட்டேன். என்னுடைய குமாரன் என்னிலும் உயர்ந்து விட்டான் என்ற பூரிப்போடு நான் இப் போது உயிர் துறக்க விரும்புகிறேன். என் னுடைய பழி என் உயிரோடு போகட்டும்.''

சக்கரவர்த்தி தமக்குள் புன்னகை பூத்துக் கொண்டார். அவர் செய்து வைத்திருந்த ஏற்பாடு வீண் போகவில்லை. அரண்மனைக் கூடம் ஒன்றில் விழா மேடைக்கடுத்தாற் போல் நாகமரைச் சிறையிட்டு வைக்கும்படி கூறியிருந்தார் சக்கரவர்த்தி. விழா நடக்கும் போது அவருடைய விழிகள் அடிக்கடி அந்தக் கூடத்தின் பக்கம் ஏன் திரும்பின என்பதை இப்போதுதான் அறிந்துகொண் டான் விசுவநாதன்.

▶ கிருஷ்ண தேவராயர் சபையோரின் முகங் களை உற்றுப் பார்த்துக் கொண்டு வந்தார். விசுவநாதன் நிலைகுலைந்த நிலையில் காணப் பட்டதையும், அவனை அரியநாத முதலியார் அணைத்துக் கொண்டு நின்றதையும் அவர் காணத் தவறவில்லை. தண்டனையை எதிர் பார்த்துப் பரபரப்போடு காத்திருந்தது சபை. ஆனாலும் சபையின் கட்டுப்பாட்டுக்கு அவன் இணங்கி நடந்தாக வேண்டும்.

''நீங்கள் செய்திருப்பது மிகப் பெரிய குற்றம்! அதிலும் இதுவரையிலும் சிறு தவறுகூட நேராமல் பணியாற்றி வந்த நீங்களே இப்படிச் செய்திருப்பது மன்னிக்க முடியாத குற்றம். கடுமையான தண்டனை விதிக்க வேண்டியதுதான்'' என்றார் சக்கர வர்த்தி.

'மரண தண்டனைதான் கிடைக்கும்' என்று சபையில் ஒருவருக்கொருவர் பேசத் தொடங் கியது விசுவநாதனின் செவிகளிலும் ஒலித் தது. அதைக் கேட்பதற்கு முன்பாகவே அவனுடைய மூச்சு நின்றுவிடும்போலிருந்தது.

''மரண தண்டனை பெற்று உடனடியாக நீங்கள் இந்தக் குற்றத்திலிருந்து தப்பிக் கொள்ளப் பார்க்கிறீர்கள்! — இல்லையா?''

நாகம நாயக்கர் சக்கரவர்த்திகளின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தார்.

''வேறு எந்தத் தண்டனை கிடைத்தாலும் அது எனக்கு மரணத்தை விடக் கொடியதாக இருக்கும். அதனால் என்னிடம் கருணை காட்டி என் உயிரிடமிருந்தே எனக்கு விடுதலை அளிக் கும்படி வேண்டிக் கொள்ளுகிறேன்'' என்றார் நாகம நாயக்கர்.

கிருஷ்ணதேவராயருக்கு ஒரு விஷயம் நன்றாகப் புலப்பட்டு விட்டது. வேறு எந்தத் தண்டனை கொடுத்தாலுமே அதற்குப் பிறகு அவர் உயிரோடிருக்க மாட்டார். தாமே தமக்கொரு முடிவு தேடிக் கொண்டுவிடுவார்.

---




மனப் பறவை

''கவிதைகள் நட்சத்திரங்களைப் போன் றவை. தோன்றியெழும் பொழுதே வடிவ மும் — ஒளியும் — எழிலும் சேர்ந்தமைந்து இதய வானத்திலே உதிக்க வேண்டும். பொரு ளும், வடிவமும், இசைப் பண்பும் இணைந்து உருவாகிற பாடல்களே மெய்யான கவிதைகள்'' எனக் கவிதைக்கு இலக்கணம் வகுத்த கவிஞர் சோமு, அவை நிறைந்துள்ள கவிதை இலக்கியம் ஒன்றையும் சென்ற ஆண்டு தந்திருக்கிறார்.

இருபத்தொரு கவிதைகளும் சிந்திக்கும் கருத்துக் கருவூலங்களாகும்.

> உள்ளக் கதவைத் திறந்துவிட்டோள் - அவள்
> உடலின் வீட்டில் நுழைந்து வந்தாள்

என்ற 'கலைமகள்' கவிதை அவரது கவித்துவத் தைக் காட்டுகிறது.

லண்டன் துக்கடா போன்றவை நகைச் சுவை உணர்வு எழுப்புகின்றன வென்றால், 'ஓடம்', 'மனக் கதவு', 'ஆன்மக் கனவு' போன்றவை தத்துவங்களைப் பிழிந்து உமர் கய்யாமைப் போலத் தருகின்றன.

> மனமென்ற பாதையிலே
> மயிலென்ன முடிவில்லை
> நினைவென்ற சாலையிலே
> நின்றவர நேரமில்லை
> மனமான காளைக்கு
> மதிமயக்கம் நிரவில்லை

என்ற வரிகள் ஆன்மாவைப் பற்றிய சித்தரின் தத்துவங்களைச் சித்திரிப்பனவாகும். ஒவ் வொன்றும் ஒவ்வொரு கருத்தாக மலர்வதால் நம் மனமும் பறவையாகி அடுத்த கவிதை, அடுத்த கவிதை எனச் சுவைக்கப் பறக்கிறது. நூலுக்குப் பெயரான 'மனப் பறவை' கவிதைதான் நீண்டது. சுருக்கமாக அதைக் கூற வேண்டுமானால் 'சோமு இராமாயணம்' எனலாம். —புலவர் கோ. சுப்பிரமணியன்

பிரகாரம்: கலைஞன் பதிப்பகம், சென்னை—17

# உள்ளம் கவரும் சுகந்தமுள்ள உன்னத டால்க்

பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்கம் பவுடர் உபயோகித்து நாள் முழுவதும் நீடிக்கும் குளுமையையும், மனோ உல்லாசத்தையும் பெறுங்கள்




ஸ்னானத்திற்குப் பின் அனுபவமாகும் புத்துணர்ச்சி நீடித்து நிற்க, நாள் முழுவதும் நறுமணத்துடன் திகழ, பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்கம் பவுடர் உபயோகியுங்கள். இதமான வாசனையுள்ள இந்த டால்கம் பவுடர் வியர்வையை விரைவில் உறிஞ்சி, எல்லாக் காலநிலைகளிலும், உங்களை நாள் முழுவதும் குளுமையுடனும் மனோ உல்லாசத்துடனும் வைக்கும்.

## ஒவ்வொரு வருடமும் மேலும் இளமையுடன் காட்சியளிப்பது எப்படி

உங்கள் பிறந்த நாளைக் கண்டு அஞ்சுகிறீர்களா? அது, ஒவ்வொரு வருடமும் நீங்கள் நடுத்தர வயதிற்கு அருகே சென்று கொண்டிருக்கிறீர்கள் என்ற உண்மையை உணரச் செய்கிறது என்ற பயமா? காலக்கணக்கின்படி (காலெண்டரின்படி) உங்கள் வயது ஏறுமுகமாக இருப்பினும், நீங்கள் மேலும் இளமையுடன் தோற்றமளிக்க முடியும். ஆகவே, காரியத்தில் இறங்க இதுவே சரியான தருணம்!

முதலில் காலண்டரை (காலக்கணக்கை) மறந்து முகம் பார்க்கும் கண்ணாடியைக் கவனியுங்கள். இளமையுடன் தோன்றுவதற்குச் செய்யும் முயற்சியில் முதல் இடையூறு— நரை மயிர்தான். அதன் தோற்றமே முதுமையைத் தருகிறது —தன்னம்பிக்கை இழக்கச் செய்கிறது. இதன் விளைவாக உங்கள் நடை, உடை, பாவனைகள் வெகுவாகப் பாதிக்கப்படுகின்றன. உங்களை



# வளைவுகளிலே அதிக நிலையுறுதி

பயர்ஸ்டோன் டிலக்ஸ் சாம்பியன் கார் டயரிலுள்ள பிரபல "ராப்-அரவுண்ட்" டிரெட் அமைப்பின் அகலம் 18% அதிகம்—சாலையைத் தொட அதிக ரப்பரைப் பதியச் செய்வதாலும், எவ்வகை சீதோஷ்ண நிலையிலும் எந்தவகை சாலையிலும் சரி, குறிப்பாக திடீர் வளைவுகளிலும் முனைத் திருப்பங்களிலும் அபாரமான நிலையுறுதியை நிரூபிக்கிறது. உல்லாசமாக ஓட்டும் சுகத்தை உங்களுக்கு அளிக்கிறது.

ஸ்லிப்பர்-டஃப் ரப்பர்— அதிகச் செலவின்றி ஆயிரக் கணக்கான மைல்கள் அதிகமாக ஓடவும், அதிக ரீடிரெட் பெறவும் உதவுகிறது.

நான்-ஸ்கிட் ஆங்கிள் ஸேஃப்டி டிரெட்—வழுக்கும் ஆபத்தையே தவிர்க்கிறது.

ரேப்-அரவுண்ட் டிரெட் அமைப்பு—சாலையில் உன்னதமான நிலையுறுதி தருகிறது.

**Firestone** பயர்ஸ்டோன் டிலக்ஸ் சாம்பியன் டய

**ராப்-அரவுண்ட்** டிரெட் பொருந்தியது



ப்ரபுத திறனுக்குப் மேம்பமான வலிமையை அளிக்கிறது.



# பாத்திரச் சீட்டு

விமலா ரமணி

ஒரு நாளும் இல்லாத திருநாளாய்ப் பக்கத்து வீட்டுப் பார்வதி மாமி வந்தபோதே நினைத்தேன். ஏதோ விசேஷம் இருக்க வேண்டுமென்று!

''உனக்குத் தெரியுமோடி, பொண்ணே!''— என்று நீட்டி முழக்கி விட்டு ஆரம்பித்தாள் மாமி.

''ஏதோ பாத்திரச் சீட்டாம்! ஐந்து ரூபாய்க்கு ஐம்பது ரூபாய்ப் பாத்திரம் கிடைக்குமாம்!''

வாயைப் பிளந்தேன் நான். இப்படி ஒரு லாபமா?

ஆனால் மாமி மேலே விவரித்தாள்.

''ஐந்து ரூபாய் கொடுத்து நீ என்கிட்டே ஒரு டிக்கட் வாங்கறே இல்லையா? பத்து நாட்கள் கழிச்சு உனக்குப் போஸ்டிலே...''

''பாத்திரம் வருமா?'' என்று படபடத்தேன்.

''நன்னா இருக்குடி பொண்ணே... கஷ்டப்படாமே ஐந்து ரூபாய்க்கு ஐம்பது ரூபாய்ப் பாத்திரம் கிடைக்குமா?''

''நான் என்ன பண்ணணும்?''

''உனக்குப் பதினாறு ரூபாய்க்கு வி. பி. வரும். அதில் மூணு சீட்டு இருக்கும். அதை மூணு பேருக்கு வித்து அனுப்பிச்சு, அவா வி. பி. எடுத்தால் உனக்குப் பாத்திரம் வரும். அந்த மூணு பேர்கிட்ட டிக்கெட் ஐந்து ரூபாய் வசூல் பண்ணிப் பதினைந்து ரூபாய் நீயே எடுத்துக்கலாம். உனக்கு மொத்த அடக்கம் ஆறு ரூபாய்தான் பாத்திரமே...'' மேலும் மேலும் மாமி விவரித்தபோது ஆசை மூண்டது.

'மூன்று பேர்கூடவா எனக்குத் தோழிகள் இல்லை... பார்க்கலாமே... கம்பெனி பொய் இல்லே... பாத்திரம் எத்தனையோ பேர்களுக்கு வந்திருக்கிறது. நாமும் முயன்றால் என்ன?'

நான் டிக்கட் வாங்குவதாக முடிவு சொன்னபோது பார்வதி மாமி முகத்தைப் பார்க்க வேண்டுமே! அப்போதே அவளுக்குப் பாத்திரம் வந்துவிட்டது மாதிரி இருந்தது!

''உனக்கு என்ன பாத்திரம் போடணும் டிக்கெட்டிலே?''

வரிசையாகப் பாத்திரங்களின் பெயர்களைப் பார்த்தேன். எல்லாமே நல்ல 'அயிட்டங்கள்!'

இவரும் ரொம்ப நாட்களாக ஆபீஸுக்குச் சாப்பாடு கொடுத்தனுப்பு என்கிறார். பிற்பகல் வீட்டுக்கு வருவது சிரமமாக இருக்கிறது என்கிறார். நானும் ஒரு டிபன் காரியர் வாங்கக் கோடிக்கிறேனே கோடிக்கிறேனே அப்படிக் கோடிக்கிறேன்.

இந்த 'அயிட்ட'த்தில் டிபன் காரியர் பார்த்தேன். அதையே குறித்து விட்டேன்.

அன்று இரவு முழுவதும் டிபன் காரியர் கனவுதான். இவரிடம் மெல்லக் கூறியபோது, ''இதெல்லாம் சாமர்த்தியம் உள்ளவர்களுக்குச் சரி... உனக்கு...'' என்று இழுத்தார்.

''ஆமாம்.... எனக்குச் சாமர்த்தியம் போதாதுதான்... இல்லாவிட்டால் இப்படி உங்களைக் கல்யாணம் செய்து கொண்டு கஷ்டப்படுவேனா...?'' அழுகை பொத்துக் கொண்டு வந்தது எனக்கு.

''சரி...சரி... எனக்கேன் பாடு. ஏதோ நல்லது சொன்னேன். அவ்வளவுதான்...'' என்று அவர் போய்விட்டார்.

இதற்கிடையில் பார்வதி மாமி அடிக்கடி இனிப்புச் செய்து கொண்டு என்னைப் பார்க்க வந்தாள்! வேறு ஒன்றுமில்லை.. வி. பி. வரும் நாள் நெருங்க நெருங்க மாமிக்கே கவலை! நான் வி. பி. எடுக்க வேண்டுமே! அப்போது தானே மாமிக்குப் பாத்திரம் வரும்!

அந்த நாளும் வந்தது. வி. பி. எடுத்து விட்டேன். அடுத்தது என் படலம். அதாவது ஆள் தேடும் படலம்! ஆரம்பத்தில் ரொம்பச் சுலபம் என்றுதான் நினைத்தேன். ஒரு சிநேகிதிகள் வீட்டுக்கு முதலில் சாதாரணமாய்ப் போனேன். எடுத்தவுடனேயே விஷயத்துக்கு வரலாமா? இரண்டாம் முறை போனபோது—

இரண்டு சிநேகிதிகள் இதே போல் டிக்கெட்டை வைத்துக் கொண்டு தவிப்பது தெரிந்தது! மற்றும் சிலர் என்னைக் காணவே பயந்து ஓடி ஒளிந்தனர்.

ஒருத்தியை வற்புறுத்திப் பார்த்தேன். அவளுக்கும் எனக்கும் மனஸ்தாபம்தான் வளர்ந்தது!

இவரோ....?

தினம் தினம் ''எத்தனை டிக்கட்டுகள் வித்ருவ?'' என்று கேட்டு வந்தார். அவர் சாதாரணமாகக் கேட்டால் கூடக் குற்றமுள்ள என் நெஞ்சு குறுகுறுத்தது.

கடைசியில் ஒரு முடிவு செய்தேன்.

எப்படியோ சொல்லிக் கில்லி என் அக்காவைச் சரிக்கட்டினேன். டிக்கட் பணம் ஐந்து ரூபாய் வராவிட்டாலும் போகிறது. வி. பி. எடுத்தால் எனக்குப் பாத்திரம் வந்துவிடுமே! ஐம்பது ரூபாய் பாத்திரமா, கொக்கா?

இதற்கிடையில் பார்வதி மாமிக்குப் பாத்திரம் வந்து விட்டது. பெருமையுடன் என்னிடம் கொண்டு வந்து காட்டினாள்.

என்னுள் புது உற்சாகம் பொங்கியது.

எப்படியும் பாத்திரம் வாங்காமல் போவதில்லை. இன்னொரு டிக்கட்டை என் பேரிலேயே போட்டுக் கொண்டேன். போகிறது. பதினாறு ரூபாய்தானே செலவு! ஐம்பது ரூபாய்ப் பாத்திரம் வருமே!

இன்னொரு டிக்கெட் பாக்கி! அதை என்ன செய்வது?

''அம்மா!'' — என்ற வேலைக்காரியின் குரல் என் காதில் அமுதமாகப் பாய்ந்தது. அவளைச் சரிக்கட்டி ஒன்றைத் தள்ளிவிட்டால்...?

எப்படியோ அவளைச் சரிக்கட்டினேன். டிக்கட் பணம் ஐந்தை அடுத்த மாதச் சம்பளத்தில் கழித்துக் கொள்ளச் சொன்னேன். எப்படியோ பணம் வருவாகிவிடும்.

மூன்று டிக்கட்டுகளையும் அனுப்பிவிட்டேன். வி. பி.யும் வந்து விட்டது. நானும் அக்காவும் வி. பி. எடுத்து விட்டோம்.

பதினாறும் பதினாறும் முப்பத்தி இரண்டு ரூபாய். நான்தான் செலவழித்தேன். அக்கா தனக்கு வந்த அந்த மூன்று டிக்கட்டுகளையும் என்னிடமே தந்து விற்றுப் பணம் எடுத்துக் கொள்ளச் சொல்லிவிட்டாள்!

எனக்குத் தலை சுற்றியது. இந்த முதல் 'செட்' விற்பதற்குள் நான் பட்ட பாடு!

இருக்கட்டும், அக்காவாயிற்றே! மூன்றும் மூன்றும் ஆறு டிக்கட்டுகள்.

இந்த வேலைக்காரி என்னவானாள் என்று நான் நினைத்தபோது அவள் தலையைச் சொறிந்துகொண்டு நின்றாள். ''என்னடி?'' என்றேன்.

''வி. பி. வந்திருக்குங்க. பணம் இல்லை.''

''ஐயய்யோ! திருப்பி அனுப்பிட்டியா?''

''இல்லீங்க... நாளைக்கு வரச் சொல்லியிருக்கேன்...''

நல்ல காலம்... அவளிடம் பதினாறு ரூபாய் அழுதேன். வேறு வழி? எப்படியும் சம்பளத்தில் கழித்துக் கொண்டால் போயிற்று!

அப்பாடா! ஒரு நிம்மதி! மூன்று வி. பி.யும் எடுத்தாயிற்று. இன்னும் பத்துப் பதினைந்து நாட்களில் பாத்திரம்... டிபன் காரியர் வந்து சேர்ந்து விடும்.

எத்தனை அடுக்கு இருக்குமோ? நாலோ ஐந்தோ? இவர் ஒருவருக்கு அத்தனையிலும் என்ன போடுவது?

ஒன்றில் சாதம், ஒன்றில் குழம்பு...இப்படி ஏதேதோ கற்பனைகள்!

பொழுது விடிந்தது.

வேலைக்காரி வரவில்லை. என்னவாயிற்று? அவள் புதிது வேறு. அவள் வீடு இருக்கும் இடம் கூட எனக்குத் தெரியாது.

மேலும் இரண்டு தினங்கள் கழிந்தன. அவள் வரவே இல்லை! வீட்டு வேலை தடுமாறியபடி சென்று கொண்டிருந்தது.

எப்படியோ இன்னொருத்தியைப் பிடித்து வீட்டு வேலைகளைக் கவனித்தேன். ஆனால் பழையவள் என்ன ஆனாள்? பணம் என்னவாயிற்று?

அன்று போஸ்டில் ஒரு 'கார்டு' வந்தது எனக்கு. மேற்படி பாத்திரக் கம்பெனிக் கார்டுதான்.

''தாங்கள் அனுப்பிய விலாசத்தில் ஒருவர் வி. பி.யை நிராகரித்ததால் தாங்கள் உடன் பதினாறு ரூபாய் அனுப்பினால் தங்களுக்குப் பாத்திரம் அனுப்பி வைக்கப்படும்.''

என் தலை சுற்றியது.

தலைச்சுற்றலோடு மெதுவாகக் கணக்குப் போட்டுக் கொண்டேன் முணுமுணுத்தவாறு. ''டிக்கட் பணம் ஐந்து, மூன்று வி. பி. நாற்பத்தெட்டு — ஐம்பத்தி மூணு — இத்தனை நஷ்டத்தோடு—''

''ஒரு வேலைக்காரியும் நஷ்டம்...ஐம்பது ரூபாய்ப் பாத்திரமும் நஷ்டம்!''

என் கணவர் குரலா அது? அவரை நிமிர்ந்து பார்க்கத் தெம்பேது?

நான் உள்ளே ஓட முயன்றேன்.

''நில், உள்ளே ஓடாதே!... இந்தா டிபன் காரியர்...''

நான் வியப்புடன் அவரைப் பார்த்தேன்.

''என் ஆபீஸில் சீட்டுக் கட்டினேன். இந்தத் தடவை எனக்கு விழுந்தது. ஏதோ அதிர்ஷ்டம். எடுத்து உள்ளே வை... நாளையிலிருந்து அதில் சாப்பாடுபோட்டு அனுப்பு...''

அப்போது பார்த்துப் பார்வதி மாமி உள்ளே நுழைந்தாள்.

''ஏதடி பொண்ணே... பாத்திரம் வந்து விட்டதா?''

''ஆமாம் மாமி... நன்றாக இல்லை...இப்போதுதான் வந்தது... எப்படி?''

பின்னே என்ன சொல்வது? தோல்வியையும் நஷ்டத்தையும் வெளியிட முடியுமா?

'காரியர் கொடுத்த தெய்வமாக' என் கணவர் கண்ணெதிரே நின்றார்.

---



ஸ்டாம்புகளைக் கொண்ட காதணிகளை அணிவது இப்போது லண்டனில் பாஷனாகி வருகிறது. லண்டனில் உள்ள பாரிஸ் ஹவுஸ் நிறுவனத்தார், எந்தவிதமான தபால் முத்திரையையும் வைக்கும்படியாகக் காதணிகளைத் தயாரிக்கிறார்கள். அவசரமாகக் கடிதம் அனுப்ப வேண்டுமானால், காதணியில் உள்ள ஸ்டாம்பை எடுத்து உபயோகித்துக் கொள்ளலாம்.

— விஜய்

# கால்கேட் டூத் பிரஷ்

**மேலும் துப்புரவாக உங்கள் பற்களை சுத்தம் செய்யும்படி அமைக்கப்பட்டிருக்கிறது!**

4 சைஸ்கள் • அடல்ட் • ஜூனியர் • சைல்ட் • பேபி
ஹார்ட் • மீடியம் • ஸாப்ட்




ஸ்டெரிலைஸ் செய்யப்பட்ட நைலான் பிரிஸ்ஸில்கள் உறுதியாகப் பொருத்தப்பட்ட படியால் அதிக நாள் உழைக்கக்கூடியது!

**புதியது**
**மிகவும்**
**கவர்ச்சியானது!!**
**கால்கேட்**
**சூப்பர் டீலக்ஸ்**
**டூத் பிரஷ்**

கவர்ச்சியான, நல்ல பெட்டியில்......விசேஷமான உருவமைப்புடன் அதிகமான பிரஸ்ஸில்களைக் கொண்ட முன் நுனியோடு வேலைகளைச் செய்யும் டூத் பிரஷ்!



வாய் துர்நாற்றத்தை அகற்ற கால்கேட் காட்டும் வழி

TBG-15 TAM

---

பண்டிட் டி. கோபாலாசார்லுவின்

# ஜீவாம்ருதம்

ஆரோக்யத்திற்கும் பலத்திற்கும்



**ஆயுர்வேதாஸ்ரமம்**
**பிரைவேட் லிமிடெட் சென்னை-17**

---

# கால் அரிப்பு சரும அரிப்பு

அரிப்பு, எரிச்சல் முதலிய உபாதைகளை உங்களால் தாங்க முடியாமல் பைத்தியம் பிடித்து விடும் போலிருக்கிறதா? உங்கள் சருமத்தில் வெடிப்புகள் தோன்றி தோல் உரிந்து ரத்தம் கசிகிறதா? பாதங்களிலும் கால் விரல்களுக்கிடையிலும் புண்கள் தோன்றி உபத்திரவம் செய்கின்றனவா? இவைகள் வெடித்துக்கசிந்து மேலும் புண்களை உண்டாக்குகின்றனவா? இவைகளுக்கெல்லாம் மூலகாரணம் சிரங்கு, சொறி, வண்ணாரப்படை, என்று பல பெயர்களில் வழங்கப்படும் ஒருவகைக் கிருமி. மூலகாரணமான இந்தக் கிருமிகளை ஒழிக்கும்வரை இவ்வுபாதைகளிலிருந்து நிவாரணமடைய முடியாது. விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்ட நிக்ஸோடெர்ம் (Nixoderm) முதல் தடவை போட்டவுடனேயே அரிப்பை நிறுத்தி கிருமிகளைக் கொன்று சருமத்தின் புண்களை ஆற்றி மிருதுவாக்கி சுத்தப்படுத்த ஆரம்பிக்கிறது. நிக்ஸோடெர்ம் (Nixoderm) அரிப்பை நிறுத்துவதில் வெற்றி கண்டுள்ளது. மேலும் பாதத்தின் மேலிருக்கும் புண்கள் மேலாகப் பரவும் படை, முகப் பருக்கள் கட்டிகள் முகத்திலோ அல்லது தேகத்திலோ பரவிய படர் தாமரை முதலிய உபாதைகளைக் குணமாக்குகிறது. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள். பூரண திருப்தியை அது நிச்சயமாக அளிக்கும்.

இளம் நீல டிஸ்டெம்பர் பூசிய அந்த அழகிய அறையின் சுவரில் எதிரெதிராக இரு வண்ண ஓவியங்கள் பொருத்தப்பட்டிருந்தன. ஒன்று மொகலாய மன்னன் ஷாஜஹானுடையது. மற்றது தசரத புத்திரனை இராமனுடையது. அவைகளை மெல்லிய சல்லாத் திரைகள் மூடியிருந்தன.

அந்த அறை முழுதுமே கலைத் திறமையுடன் அலங்கரிக்கப்பட்டிருந்தது. இடது புறத்து ஜன்னலின் அருகில் வினோதாவின் பெரிய கட்டில். சாளரத்துத் திரையை விலக்கி விட்டு வெளியே நோக்கினால் பூத்துக் குலுங்கும் மலர்த் தோட்டம் கண்ணுக்கு எதிர்ப்படும். அதை அடுத்துச் செங்காவி பூசிய சுற்றுச் சுவர் பார்வையைத் தொடர்ந்தால் இளம் பச்சை அடுக்குகளுடன் கூடிய உயர்ந்த மலைத் தொடர்புகள். அதனின்று வெள்ளிக் கம்பியாக இழியும் நீரருவிகள்.

விவேகானந்தர் சமாதி நிலையில் தோற்ற மளித்தார். நடுவில் அடைக்காக்கும் பெட்டைக் கோழியின் பார்வையுடன் பரமஹம்ஸர் வீற்றிருந்தார். அடுத்து, நிறைந்திருந்த வைது தோளில் நீலக் கூந்தல் சரிய அன்னை சாரதா மணி அமர்ந்திருந்தார்.

கூடத்துக் கடிகாரம் பதினொரு தரம் இசையுடன் ஒலித்து ஓய்ந்தது. படித்துக் கொண்டிருந்த புஸ்தகத்தைத் தலையணையின் அருகில் வைத்துவிட்டு வினோதா அறைக்கும் மணியின் விசையை அழுத்தினாள்.

வெள்ளை ஆடை தரித்த முதிய வேலையாள் ஒருவன் பணிவுடன் திரையை விலக்கிக் கொண்டு உள்ளே வந்தான். "பெரியவரே! மணி பதினொன்று. முதலாளிக்குச் சாப்பாடு அனுப்பியாகி விட்டதா, தெரியுமா?"

"ஆச்சு, அம்மா! சாப்பாடு எடுத்துக் கிட்டு ஆயாம்மா இப்போத்தான் போனாங்க. நானே பார்த்தேன்." தணிந்த குரலில் கூறி விட்டு மலர்க்கொத்தொன்றை மேஜைமேல் இருந்த பூச்சாடியில் வைத்தான் அந்தப் பணியாள். அதன் காம்பு மஞ்சள் நிறம். அதன் மேல் ஆரஞ்சு வண்ணம் இழை ஓடியது. மேலே போகப் போக அது நீல வர்ணமாக விரிந்தது. உட்புறம் தூய வெள்ளை. இயற்கையின் அழகுமிக்க கற்பனை!



# ஒரே சொல் ஒரே பாணம்

(அட்டைப்படக் கதை)

தி. சா. ராஜூ

மலைச் சிகரங்களில் தயங்கித் தயங்கித் தங்கிச் செல்லும் கருமை விளிம்பு பூசிய வெண் பஞ்சுப் பொதிகள். சூரிய ரச்மியை வடிகட்டிக் கண்ணைக் கூச வைக்காத ஒளியைக் கீழ்த்தளத்துக்கு வழங்கும் நிறமில்லாத ஆகாய விதானம்.

அறையின் தளம் வழுவழுப்பாக இருந்தது. கட்டிலுக்குப் பக்கத்தில் அதே உயரத்தில் ஒரு சிறிய டீப்பாய். சற்றுத் தள்ளிக் கண்ணாடியுடன் கூடிய டிரஸ்ஸிங் டேபிள். அதன் மேல் உயர்ரக ஒப்பனைச் சாதனங்கள். அதிக உயரமில்லாத திண்டு வைத்த சோபாக்கள் இரண்டு. அதற்கருகில் வார்னிஷ் செய்யப்பட்ட பளபளக்கும் 'பெக்' ஸ்டூல்கள். அறையின் நுழை வாயிலுக்குப் பக்கத்தில் ஒரு சிறிய எழுதும் மேஜை. அதன் பச்சை விரிப்பின் மேல் ஒரு கண்ணாடித் தகடு. காகிதம் பறக்காமல் இருக்க இரு வண்ணக் குமிழ்கள். தங்கமுலாம் பூசிய பேனா ஒன்று. நடுவில் ஓர் அடுக்கு வெள்ளைத் தாள்கள் வைக்கப்பட்டிருந்தன. மேஜையை ஒட்டிய சுவரிலும் ஓர் ஓவியம் இருந்தது. அதனுள் மூன்று உருவங்கள். இடது புறம் துறவி

தொலைவில் ஆலைச் சங்கொன்று கூவி ஓய்ந்தது. முற்றத்தில் காகங்கள் இரண்டு கரைந்தன. அவைகளுடைய உணவு வேளை வந்து விட்டது.

"சாப்பாடு கொண்டு வரட்டுமா? அல்லது சற்றுப் போகலாமா?" சிரித்த முகத்துடன் வினவியவாறே ஜானகி அம்மாள் அறையினுள் நுழைந்தார்.

உற்சாகமின்றி முகத்தைச் சுளித்தவாறே கட்டிலிலிருந்து கீழே இறங்க முற்பட்டாள் வினோதா. "வேறு உபயோகமான வேலை எதுவும் செய்யாவிட்டாலும் இதையாவது செய்கிறேன்." அலுத்துக் கொண்டே குளியலறைக் கதவைத் தள்ளினாள் வினோதா.

பூத்துவாலையினால் முகத்தைத் துடைத்துக் கொண்டு டிரெஸ்ஸிங் டேபிளிலிருந்த நீலக் கண்ணாடியின் முன்பு நின்றாள் வினோதா. கலைந்திருந்த முன்னுச்சி மயிரைப் பிரஷினால் சீர் செய்தவாறு தன்னையே பார்வையினால் எடை போட்டுக் கொண்டாள். நிழலில் வளரும் செடியைப் போலிருந்தது அவளுடைய முகம். என்றாலும் உடல் கட்டுவிட

வில்லை. விண்ணென்று தனித் தனியாக விண்டு வைக்கும் வாளிப்பை அவளுடைய உடல் இழந்து விட்டிருந்த போதிலும் பார்வையாளர்களின் கவனத்தை ஈர்ப்பதற்குத் தேவையான கவர்ச்சி அவளிடம் இன்னும் மிகுதியிருந்தது. பூங்கொடியின் நுனியைப் போல் சுருண்டு நிற்கும் அவளுடைய முன்கேசத்தை முறுக்கி மகிழ்வது திலகனின் விளையாட்டுக்களில் ஒன்று.

''நீங்கள் இதை முறுக்கும் போது எனக்கு எவ்வளவு இதமாக இருக்கிறது தெரியுமா?'' என்று அவள் மயக்க நிலையில் கூறும்போது திலகன் அவளுடைய கண்ணிமைகளை நுனி விரலால் மூடுவார். எத்தகைய காந்தக் கவர்ச்சி தரும் விளையாட்டை இழந்துவிட்டோம் என்று எண்ணும்போது அவளுடைய நெஞ்சு பொங்கி வந்தது.

மூடியோடு கூடிய உணவுத் தாலத்தை மேஜையின் மேல் கொண்டு வந்து வைத்தாள் ஜானகி அம்மாள். அவளுக்கு மூச்சு வாங்கிற்று. மூடியை நீக்கியதும், ''ஐயோ, என்ன மறதி அம்மா எனக்கு! நெய்க் கிண்ணம் கொண்டு வரவில்லை'' என்று கூறித் திரும்பினாள். வினோதாவுக்குப் பசி வயிற்றைக் கிள்ளிற்று. இத்தகையான பசி நாவில் இனிய உமிழ் நீரைச் சுரக்கச் செய்தது. உணவுத் தட்டை ஆவலுடன் நோக்கினாள். ஜானகி அம்மாள் சமையற் கலையில் நிபுணத்துவம் வாய்ந்தவள். எந்த வேலையையும் ஒரு கலை அழகுடன் செய்வாள். வினோதாவுக்குப் பசி பொறுக்கவில்லை. தாலத்தைத் தன் அருகில் இழுத்தாள்.

உண்டு மகிழக்கூடிய இன்சுவைப் பண்டங்கள் எதிரே இருக்கும்போது அவற்றைச் சுவைக்கக் கூடாத நிர்ப்பந்தம் ஏற்பட்டு விட்டால் — தன் கணவர் திலகனின் நினைவு வந்தது. பசியும் தாகமும் எடுக்கும்போது கூட அவர் தத்துவப் பேச்சுப் பேசுவாரே! கலீல் ஜிப்ரானின் மேற்கோள் காட்டி 'இந்தத் தண்ணீர் எத்தனை யுகங்களாக என்னுடைய தாகத்தைத் தீர்க்கத் தவம் புரிந்து கொண்டிருந்ததோ?' என்று கேட்பாரே. அந்தத் தண்ணீரைப் போல நானும்!

கிண்ணத்திலிருந்த பொரியலின் ஒரு துணுக்கை எடுத்து வாயில் இட்டுக்



கொண்டாள் வினோதா. சுவையில்லை. ஸ்பூனி னால் சிறிது கூட்டை எடுத்துச் சுவைத்துப் பார்த்தாள். சப்பென்றிருந்தது. அவசர அவசரமாகக் குழம்பை ருசி பார்த்தாள். அதிலும் உப்பில்லை. நெய்க் கிண்ணத்துடன் உள்ளே நுழைந்த ஜானகியைச் சற்றுக் கோபத்துடன் நோக்கினாள். ''இது என்ன அம்மா, எதிலுமே உப்பில்லை? ஏதாவது பத்தியச் சாப்பாடா?'' வினோதா வினவினாள்.

ஜானகி அம்மாளின் முகம் சட்டென்று மாறியது. ''ஏனோ அம்மா, நேற்று குமுதத் திடமிருந்து கடிதம் வந்ததிலிருந்து என் மன நிலை சரியில்லை. இது அவருக்காகத் தயார் செய்தது. நீங்கள் எச்சிலாக்கவில்லையென் றால்....'' வினோதாவின் முகம் சினத்தினால் சிவந்ததைக் கண்டு பயந்தாள் ஜானகி.

''அவருக்கு மட்டும் ஏன் உப்பில்லாமல் தயாரித்திருக்கிறீர்கள்? இதை அவர் எப்படிச் சாப்பிடுவார்?'' வினோதா பதறினாள்.

''சென்ற இரண்டு மாதங்களாகவே இப்ப டித்தான் பதார்த்தம் தயாரிக்கிறேன். அந்த இயற்கை வைத்தியர் பிரகாசம் வந்தாரே, நினைவிருக்கிறதா? அது முதல்....''

வினோதாவின் முகம் துயரத்தால் வாடிற்று. தன் முன்றானையை எடுத்து ஜானகிக்குத் தெரி யாமல் விழி நீரைத் துடைத்துக்கொண்டாள். ''நீங்கள் போய்க் குமுதத்தின் கடிதத்தைக் கொண்டு வாருங்கள்.''

ஜானகி அம்மாள் அறையை விட்டு நீங் கிய பிறகு எதிரும் புதிருமாக இருந்த இரு ஓவியங்களை மறுபடியும் கூர்ந்து கவனித் தாள் வினோதா.

மொகலாய மன்னன் ஷாஜஹான் மஞ்சத் தில் சாய்ந்தவாறு எதிரே கூர்ந்து நோக்கு கிறான். கீழே தரையில் உட்கார்ந்திருக்கிறாள் அவனுடைய மகள் ஜஹானரா. சிறுப் பலகையில் புனிதக் குரான் வைக்கப் பட் டிருக்கிறது. அவளுடைய முகத்தில் பக்திப் பரவசம். மகள் ஓதும் புனித நூலைத் தந்தை செவியுறவில்லை. அவருடைய பார்வை தொலைவில் யமுனை நதிக் கரையில் நித்தியத் துவத்தின் கண்ணீர்த் துளியாக விளங்கிய பளிங்கு மண்டபத்தில் பதிந்திருக்கிறது. தந்தையின் மனத்தில் இன்னும் பசுமை யாகப் படிந்திருக்கும் மும்தாஜின் நினைவை மாற்ற ஜஹானரா அறநூல் ஓதுகிறாள். அவளும் காதலில் தோல்வியுற்ற பேதை.

அந்த ஓவியத்தை வரைந்தவர் திலகனின் மாணவரில் ஒருவர். ஓர் இஸ்லாமியர். மொகலாய சரித்திரத்தை ஆழ்ந்து படித்து விட்டு அவற்றில் பல காட்சிகளை இப்படி அவர் ஓவியமாக்கி யிருந்தார்.

திரைச் சீலையை விலக்கிக் கொண்டு கையில் ஒரு கடித உறையுடன் ஜானகி அம்மாள் உள்ளே நுழைந்தாள்.

''என்னுடைய தமையன் இருந்த வரையில் ஒவ்வொரு வருஷமும் விடுமுறைக்கு மணப் பாறைக்கே போய் விடுவாள் குமுதம். சென்ற செப்டம்பரில் அவன் காலமாகி விட்டான். இனிமேல் அவள் அங்கே செல்வது சரியில்லை. என் அண்ணியும் அதை விரும்ப மாட்டாள். இந்த வருஷம் ஹாஸ்டல் மூடிய பிறகு எங்கே போவது என்று தெரியாமல் திகைக்கிறாள்'' என்று தணிந்த குரலில் கூறினாள் ஜானகி.

''குமுதத்துக்கு என்ன வயதாகிறது?'' உணர்ச்சியற்ற குரலில் வினவினாள் வினோதா.

''இந்த ஏப்ரலுக்குப் பதினெட்டு முடி கிறது. பி.யூ.ஸி. முடித்து விட்டாள். இது வரையில் ஸ்காலர்ஷிப் கிடைத்தது. இப்போ தும் முதல் வகுப்புக் கிடைத்தால் கல்லூரியில் சம்பளமிராது. ஆனால் அவள் கல்லூரியில் படித்து என்ன செய்யப் போகிறாள்?''

மேஜையின் மேல் தலையைக் கவிழ்த்த வாறே சிந்தனையில் ஆழ்ந்தாள் வினோதா.

அவள் மனம் பழைய நினைவுகளில் சுடு பட்டது. அப்போதெல்லாம் திலகன் சமய மார்க்கத்திலோ ஞானப் பாதையிலோ புகுந்து தன் ஆராய்ச்சிகளைச் செய்யவில்லை. நாடு விடுதலை பெற்று இவ்வளவு ஆண்டு களாகியும் அதன் மூலம் ஏழை மக்களின் நிலை எதிர்பார்த்த அளவு சீராக அமைய வில்லை. இந்தப் பொருளாதாரப் பிரச்னை அவர் உள்ளத்தை வாட்டியது. அதை அடிப்படையாக வைத்துக் கொண்டு அவர் பல சிறுகதைகளும் நெடுங்கதைகளும் புனைந்தார். சேரி வாழ் மக்களின் கொடிய வறுமை நிலை, மத்தியதர வகுப்பின ரின் போலித்தன்மை ஆகியவைகள், அவ ருடைய கதைகளின் கருப்பொருளாக விளங் கின. அவர் 'காலி டிஃபன் பாக்ஸ்' என்றொரு கதை எழுதினார். அதன் கதாநாயகி பெரிய வியாபாரக் கம்பெனியில் வேலை பார்க்கும் ஒரு லேடி டைப்பிஸ்ட். அவள் தன் வீட்டி லிருந்தே காலியாகக் கொண்டு வந்திருக்கும் டிஃபன் பாக்ஸை இடைவேளையின்போது பிறர் பார்க்கக் கழுவி வைத்து விட்டுத் தொலைவில் சாப்பாட்டுக் கடைக்காரியிடம் ஓரணாவுக்குக் கவளச் சோறு வாங்கி உண்ணும் கூலிக்காரர் களைக் கண்டு பொறாமைப்படுகிறாள். — இந்தக் கதையின் கருத்து வினோதாவை மிகவும் கவர்ந்தது. தன் வாழ்க்கையையே இது பிரதிபலிப்பதாக இருக்கிறது என்று கூறி அவரை நேரில் கண்டு பாராட்ட வந்த வினோதா அவருக்கே உரியவள் ஆனாள். அதற்குப் பிறகு அவர்கள் கூடி நிறுவிய சொற்கோயில்கள் அனந்தம்.

'எத்தனை வேகம்! எத்தனை தீவிரம்! எல்லா வற்றிலுமே உங்களுக்கு ஒரே வேகம்தான்' என்று அவள் திலகனிடம் கூறும்போது வினோதாவின் பூக்கன்னங்கள் சிவந்துவிடும். அவளுடைய முன்னுச்சி மயிர்க் கொத்தை விரலால் சுருட்டியவாறே அவர் கூறுவார். 'எதையுமே ஒருமுகப்படுத்தினால் வேகம் அதிகமாகத்தான் இருக்கும். காடா விளக் கைப்போல் அழுதுவடிந்து கொண்டு எரிவதை விட விண்ணிற் கொள்ளியைப் போல் ஒரே கணம் வாழ்ந்து விட்டு மறைந்து விடலாம். வாழ்க்கை என்பது மனத்தைப் பொறுத்தது. எத்தனை காலம் வாழ்ந்தோம் என்பது கேள்வி இல்லை. எப்படி வாழ்ந்தோம் என்பதுதான முக்கியம்' என்று அவர் பதிலிறுப்பார்.

# பாதரக்ஷை விஷயமான இப் புதிய

## பரபரப்பூட்டும் விவரங்களை யாரும் உதாசீனம் செய்ய முடியாது



டே-பான்
ஆடவருக்கு
சைஸ் 4—9
ரூ. 10.95

இப்பொழுது! முதன் முறையாக நவீன தொழில் நுணுக்கங்களை முற்றிலும் பிரதி பலிக்கும் ஒரு பாதரக்ஷை! பாட்டா ரசாயன நிபுணர்கள் மற்றும் என்ஜினியர்களின் பல்லாண்டு இடைவிடாத ஆராய்ச்சியின் பயனாக முற்றிலும் நூதனமான ஒரு பாதரக்ஷை உருவாகியுள்ளது. கவர்ச்சி, கனமின்மை, மதிப்பு அனைத்திலும் இணையற்றது. கெமிலான் காம்பவுண்டினால் செய்யப்படும் பாட்டா ஸாண்டாக் என்ற இப் பாதரக்ஷை குறிப்பிட்ட சில தயாரிப்பாளர்களால் மட்டும் பாட்டா திட்டமுறைப்படி உருவாக்கப்படுகின்றன. பாட்டா ஸாண்டக் மிக உறுதியானது. அசாதாரணமான காலம் உழைப்பது. எத்தனை மைல் உபயோகித்த பிறகும் புதுமை குன்றாமல் அழகுடன் விளங்கும். எத்தகைய பருவநிலைகளுக்கும் ஈடுகொடுப்பது. உண்மையில் ஸாண்டக் பாதரக்ஷையை நீங்கள் கழுவிச் சுத்தம் செய்யலாம். அவ்வப்பொழுது சுத்தம் செய்து அணிவதும் சுலபம். பாதரக்ஷையில் இத்தகைய நூதன சௌகரியம் பெற இன்றே உங்கள் அருகிலுள்ள பாட்டா பாதரக்ஷை கடைக்குச் சென்று அணிந்து பாருங்கள்.

விரைவில் பாட்டா ஸாண்டக் பையன்கள், குழந்தைகள்—மற்றும் மாதர்கள் அணியும் பாதரக்ஷைகளும் சாதா மற்றும் கவர்ச்சி நிறங்களில் கிடைக்கும்.

# Bata

# ஸாண்டக்*

## கெமிலான்*

* ரிஜிஸ்டர்டு டிரேட் மார்க்

அப்படித்தான் ஆயிற்று அவர்கள் வாழ்க்கை. முரளியைப் பிரசவித்தபோது வினோதா செத்துப் பிழைத்தாள். அந்தப் பெரிய 'கிளினிக்'கின் தலைவர் ஓர் அமெரிக்கர். அவர் சிறிதுகூட ஒளிவு மறைவு காட்டவே இல்லை. 'வினோதா இனி உங்கள் சகோதரி. இந்த விஷயத்தை நான் அவருக்கும் தெரிவித்துவிட்டேன். எங்கள் நாட்டில் இந்த மாதிரி நிகழ்ந்துவிட்டால் நாங்கள் கணவன் மனைவியின் உடன்பாட்டுடன் விவாகரத்து செய்துகொள்வோம். நீங்கள் இந்தியர்கள். உடல் இன்பத்தில் அவ்வளவாகப் பற்று இல்லாதவர்கள். நன்னூட்டும் நிச்சயம். உங்கள் குழந்தைக்குத் தாயார் வேண்டுமானால் நீங்கள் வரம்பை மீறுகிறீர்கள்.'

முரளியுடன் வீடு திரும்பிய அன்று இலகன் அவளுடைய அறைக்கு வந்தார். வெளுத்துப் போன அவளது வலது கரத்தைத் தம் கரத்தில் எடுத்து வைத்துக் கொண்டார். பிறகு அதைக் கண்களில் ஒத்திக்கொண்டு நழுவ விட்டார். வினோதா தரையில் சிரம்பட வணங்கிவிட்டு அவருடைய பாதங்களைக் கண்ணீரில் நனைத்தாள். அந்தச் சந்திப்புக்குப் பிறகு இன்று ஆண்டுகள் நான்கு கழிந்து விட்டன.

மேஜை மேல் தலையைக் கவிழ்த்துக் கொண்டிருந்த வினோதா குலுங்கிக் குலுங்கி அழுதாள். அந்தக் கண்ணீரில் சிறிது வேதனை கரைந்து போனாற் போலிருந்தது. அப்படியே அயர்ந்து உறங்கி விட்டாள். மறுபடியும் அவள் கண் விழித்தபோது நீல விளக்கு மட்டும் மலராத மொட்டைப் போல் ஒளிர்ந்து கொண்டிருந்தது. திடுக்கிட்டு எழுந்திருந்து ஸ்விட்சை அமுக்கினாள். குழல் விளக்கு ஒளியைக் கக்கிற்று. வெளியிலே நல்ல மழை பெய்திருந்ததனால் கண்ணாடிச் சாளரங்கள் எல்லாம் நீர்ப் புகை படிந்து கிடந்தன. மரங்களும், கொடிகளும் மழை நீரைச் சுமந்து நின்றன. ஜன்னல் கதவைத் திறந்தாள். விர்ரென்று குளிர்ந்த காற்று வீசிப் பல்லைக் கிட்டிற்று. கம்பளிச் சட்டையை எடுத்துத் தரித்துக் கொண்டாள்.

சந்தடியின்றி அறைக் கதவைத் திறந்தாள். வராந்தாவில் மங்கிய வழி விளக்கு எரிந்து கொண்டிருந்தது. ஈரத் தரையில் அடிமேல் அடிவைத்து நடந்தாள். சில்லென்று குளிர் காற்று வீசிற்று. இலகனின் அறையில் வெளிச்சமில்லை. அவரும் படுக்கையில் இல்லை. இதென்ன? இந்த நள்ளிரவு நேரத்தில் அவர் எங்கே போயிருக்கக் கூடும்? ஒரு தரம் படுத்துவிட்டால் மறுபடியும் நடுவில் எழுந்திருக்கும் வழக்கமே அவருக்குக் கிடையாதே! திரும்பித் தன் அறைக்குச் செல்லும் வேளையில் குளியலறையில் வெளிச்சம் தென்படுவதைக் கண்ணுற்றாள். மெள்ள அந்தப் பக்கம் நடந்தாள். அங்கே கண்ட காட்சி!

தொட்டாலே ஊசியாய்க் குத்தும் குளிர்ந்த நீர் இலகனின் மேல் அருவியாகப் பொழிந்து கொண்டிருந்தது. மேல் நோக்கிய பார்வையுடன் அவர் அதை அனுபவித்துக் கொண்டிருந்தார்.



"உங்க ரூமை ஏர்கண்டிஷன் பண்ணின செலவுக்குப் போமெ கார நெக்லஸ் வாங்கி இருக்கலாமே?"

"வாஸ்தவம். ஏர்கண்டிஷன் பண்ணியும் ஒன்னும் பிரயோஜனம் இல்லே. நீ வந்து நின்னாலே வேர்த்துக் கொட்டுறதே எனக்கு!"

---

சில நிமிஷங்கள் அசையாமல் நின்று இந்தக் காட்சியைப் பார்த்தாள் அவள். இதயம் பொங்கி வெளியே வரும்போல் இருந்தது. ஏதோ ஒரு முடிவுக்கு வந்த உறுதியுடன் தன் அறைக்குத் திரும்பினாள் வினோதா.

அப்பொழுதே மேஜையின் இழுப்பறையிலிருந்து ஐம்பது ரூபாயை எடுத்துத் தயாராக வைத்துக் கொண்டாள். காலைச் சிற்றுண்டியுடன் ஜானகி அம்மாள் அறையினுள் வந்ததும் தொகையை அவளிடம் கொடுத்து, "உடனடியாக இந்தப் பணத்தைக் குமுதாவுக்கு அனுப்புங்கள். அவளைப் புறப்பட்டு வரும்படி கடிதம் எழுதுங்கள்" என்றாள். ஜானகி அம்மாள் வினோதாவை நிமிர்ந்து பார்த்தாள். அவளுடைய கண்களில் எத்தகைய குறிப்பும் தென்படவில்லை. ஆனால் பெண்களுக்கே இந்த விஷயங்களில் உள்ள கூர்மையான நுண்ணறிவினால் வினோதாவின் உள் மனப் போக்கை அவளால் புரிந்து கொள்ள முடிந்தது.

ஜானகி அம்மாள் இலகனுக்குச் சமையல்காரியாக அமர்ந்து பதினைந்து வருஷங்கள் ஆகின்றன. அவருடைய குடும்ப விவகாரம் அறியாத எவரும் அவளைத் இலகனின் தாயார் என்றே கருதினார்கள். அவரும் அவளுக்கு அத்தகைய மரியாதையான இடத்தை அளித்திருந்தார்.

முப்பது வயதை அண்டியும் தனிக்கட்டையாக வாழும் இலகனுக்கு ஊழியம் புரிய அந்நாளில் ஜானகி அம்மாள் தயங்கினாள். அவளுக்கும் அன்று அந்த வயதுதான் இருக்கும். இலட்சியம், ஆதர்சம், உன்னதம் என்று பேசுகிற ஆண்களெல்லாம் இருக்

விருந்த பின் எப்படி இருப்பார்கள் என்பதை அவள் தனது சுய அனுபவத்தினால் அறிந்து கொண்டிருந்தாள். ஆனால் வியாஸ புத்திரனைப் போன்று தூய்மையாக இருந்த திலகனின் வாழ்க்கையைக் கண்டு அவளே அதிசயித்தாள்.

விநோதா வீட்டுக்கு வந்த புதிதில் ஞானவி அவளை எச்சரித்தாள். '.அம்மா! அவர் ஒரு சந்நியாசி. அவருடைய காவித் துண்டு இன்னும் பெட்டியடியில்தான் உறங்குகிறது. கொஞ்சம் மரியாதையுடனேயே பழகு' என்றாள் நட்புரிமையுடன்.

ஒரு வாரத்துக்குப் பிறகு அவளுக்குச் சடை சிங்காரித்தவாறே கேட்டாள் ஞானவி: ''நன்றாகப் பழகிக் கொண்டு விட்டாயல்லவா?''

விநோதா தலையைக் குனிந்துகொண்டாள். பிறகு அவளுடைய தோளில் கையை வைத்துக்கொண்டு ''அவரையா சந்நியாசி என்று சொல்லுகிறீர்கள்? சந்நியாசியிடமா இத்தனை வேகமும் பௌருஷமும் இருக்கும்?'' என்று தணிந்த குரலில் கேட்டாள்.

தொடக்கத்தில் தம்பதிகளிடம் இருந்த இந்த இணைப்பு நெடு நாட்கள் நீடிக்கவில்லை. அதுவும் முரளி பிறந்தபிறகு தான் திலகனுக்கு ஏற்ற மனைவியாக இருக்க முடியாமல் போன பிறகு விநோதாவுக்கு எதைக் கண்டாலும் எரிச்சல் வந்தது.

விநோதாவுக்கு வாழ்க்கை கசந்து போயிற்று. ஓரிரு மாதங்களாவது வைத்தியரின் கட்டளையை மீறிக் கணவனின் ஆவலைத் தணித்து அந்த ஆவேசத்தில் வெந்து சாம்பலாகி அமைதி பெறலாமே என்று கூடக் கருதினாள். அவ்வாறு செய்வது தன் கடமை என்றும் கூடக் கருதினாள். ஆனால் அதற்குத் திலகன் இணங்க மாட்டார். அவருடைய ஆதி நாளையத் துறவுப் பயிற்சிகள் இப்போது பயன்பட்டன.

குமுதவல்லி அந்த வீட்டுக்குள் நுழைந்ததிலிருந்து அங்கே குதூகலம் நிரம்பி வழிந்தது. பூத்துக் குலுங்கும் மணமுள்ள மலர்ச் செடியைப் போல் அவள் தான் சென்ற இடத்தையெல்லாம் மகிழ்ச்சியினால் நிரப்பினாள். குமுதம் வந்த பிறகு விநோதாவும் கூடத் தன் நோயின் உபாதையை மறந்து விட்டாற் போலிருந்தது. அவள் தன் அறையை விட்டு வெளியே வந்து நடமாடத் தொடங்கினாள்.

வீட்டு எஜமானனான திலகனும் முன்னை விட மகிழ்ச்சியுடன் காணப்பட்டார். சாதாரணமாகப் பிற பெண்களை ஏறிட்டுப் பார்க்கவே கூச்சப்படும் திலகன் விநோதாவின் கண்களில் அனல் ஏறும் அளவுக்குக் குமுதத்துடன் பழகத் தொடங்கினார். அவர் உலாவப் போகும்போது அணிய வேண்டிய உடை, பாலிலே சேர்க்க வேண்டிய சீனியின் அளவு ஆகியவற்றைக்கூட குமுதா உரிமையுடன் தீர்மானிக்கத் தொடங்கினாள். எதையும் தாமே செய்துகொள்ளும் சுபாவமுடைய திலகன் குமுதத்தின் பணிவிடையை ஒரு தனிக் குழைவுடன் ஏற்றுக் கொண்டு பூரித்தார். குடும்ப விவகாரம் எந்தப் பாதையில் சென்று கொண்டிருக்கிறது, எந்த ரீதியில் முடியும் என்று தெரிந்துகொள்ள விநோதாவுக்குச் சிறிதுகூடத் தயக்கம் ஏற்படவில்லை. ஏன் அந்த முடிவைத் தானே ஏற்றுக்கொண்டு விடக் கூடாது என்று அவள் மனத்தில் ஓர் அசட்டுத் துணிச்சல் பிறந்தது. தன்னுடன் திருமணப் பிணைப்பில் சிக்கிக் கொண்ட காரணத்தினால் திலகனுடைய நியாயமான இயற்கை உரிமைகளைத் தடுக்கத் தனக்கு என்ன அதிகாரம் என்று அவள் மனம் எண்ணத் தொடங்கியது. இது தன்னிடம் தோன்றும் தியாக உணர்ச்சியா அல்லது தன் கணவரின் ஆஷாடபூதித்தனத்தைத் தான் புரிந்து கொண்டு விட்டோம் என்று அவருக்குத் தெரியப்படுத்தி அவரைச் சுற்றியிருக்கும் போலித் திரையைக் கிழித்தெறிந்து பழி வாங்கும் முனைப்பா என்று அவள் ஆராய முற்படவில்லை. ஆனால் தாற்காலிகமானதொரு முடிவுக்கு அவள் வந்து சேர்ந்தாள்.

ஒரு கை நிறைய வண்ணக் கண்ணாடிக் கோலிக் குண்டுகளுடன் ஓடிவந்தான் முரளி. அவனை வாரி அணைத்துக் கொண்டாள் தாயார். அவளுக்கு உள்ளே தகித்த தழல் குறைந்தது. ''ஏது இதெல்லாம் முரளிக் கண்ணு?'' என்று அவள் குழறினாள்.

''அப்பா தான் வாங்கிக் கொடுத்தாரு.''

''அவரோடு நீயும் கடைக்குப் போயிருந்தாயா?''

முரளி அழகாகத் தலையை அசைத்தான். ''ஆமாம். அப்பா, குமுதவல்லி, நான் மூணு பேரும் போனோம். நாங்க சினிமாக்கூடப் பார்த்தோம்.''

விநோதாவின் நெஞ்சு பொங்கி வடிந்தது.

''அப்புறம் கடைக்குப் போய்ச் சாமான்களெல்லாம் வாங்கினோம்.'' குழந்தை தொடர்ந்து பேசினான்.

''என்னென்ன சாமான் முரளி?''

''குமுதவல்லிக்குச் சேலை, ரிப்பன், சோப்பு துண்டு எல்லாம் வாங்கினோம். கடைசியாக ஓட்டலுக்குப் போனோம். நான் நிறைய — இவ்வளவு நிறைய ஐஸ்கிரீம் சாப்பிட்டேன்.'' முரளி கையை உயர்த்தி வானம் வரை காட்டினான். ''உனக்குக் கூட அப்பா சாக்லெட் க்ரீம் வாங்கி வந்திருக்கிறார்.''

ஒரு தட்டில் சாக்லெட் கிரீமை எடுத்துக் கொண்டு அறையினுள் நுழைந்தாள் குமுதவல்லி. அவளுடைய முகமெல்லாம் உடலெல்லாம் புன்னகை.

''இதெல்லாம் நான் சாப்பிடக் கூடாதே குமுதா. உனக்குத்தான் தெரியாதென்றால் அவருக்குக்கூடவா நினைவில்லை?''

''உங்களுக்கு இதெல்லாம் ரொம்பவும் பிடிக்கும் என்று சொல்லி ஸ்பெஷலாக ஐஸில் வைத்து 'பாக்' செய்யச் சொன்னார்.'' மேலே சுற்றியிருந்த எண்ணெய்க் காகிதத்தைப் பிரித்து விநோதாவின் முன்பு வைத்தாள் குமுதம். அறையின் வாசலில் காலடிச் சத்தம் கேட்டது. அடுத்த கணம் திலகன் அங்கு வந்தார். 'குமுதம்' — அவளை உரிமையுடன் அழைத்தார். ''முரளிக்கு முதலில்

சாப்பாடு போட்டுத் தூங்க வை'' என்று கூறிவிட்டு நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு விநோதாவின் முன்பு உட்கார்ந்தார்.

கணவன் மனைவிக்கிடையில் தொங்கிக் கொண்டிருந்த திரை பட்டென்று அறுந்து விழுந்ததுபோல் இருந்தது. அந்த ஐஸ்கிரீம் தட்டிலிருந்து ஒரு துண்டை எடுத்துத் திலகனும் வாயில் போட்டுக் கொண்டார்.

''கொஞ்ச நாட்களாகவே உங்களிடம் ஒன்று கேட்க வேண்டும் என்று ஆசை.'' மெள்ளப் பேச்சைத் தொடங்கினாள் விநோதா.

''உங்களுடைய கொள்கைகளுக்குப் பங்கம் ஏற்படாமலும் அதே சமயத்தில் சமூகத்துக்கு விகற்பமாகப் படாமலும் நாம் வாழ்க்கையை நடத்த ஒரு வழி கண்டு பிடித்துவிட்டேன்.'' விநோதாவின் குரல் கமறிற்று. திலகன் எழுந்திருந்து அவள் கட்டிலில் அவள் அருகில் உட்கார்ந்து கொண்டார். அந்த நெருக்கம் அவளுக்குப் போதையை ஊட்டிற்று. ''நீங்கள் என்னை மனப்பூர்வமாக நேசிக்கிறீர்கள் என்று எனக்குத் தெரியும்...'' விநோதா தயங்கினாள். திலகன் தனது வலது கையினால் விநோதாவின் முகத்தை உயர்த்தி அவளுடைய விழிகளை நோக்கினார். பிறகு எழுந்திருந்து எதிரிலிருந்த ஓவியத்தின் பட்டுச் சல்லாவை விலக்கிச் சுருக்கினார். அந்தக் கணத்தில் அதைப் பார்த்த விநோதாவின் உடல் புல்லரித்தது.

வைதேகியின் உருவச் சிலையின் அருகில் இரகுவீரன் வைராக்கியம் பொங்கும் முகத்துடன் அமர்ந்து கொண்டிருந்தான். அவனுக்கு முன்னால் வெள்ளித் தீ கொழுந்துவிட்டு எரிந்தது. சற்றுத் தொலைவில் இரட்டைப் பாலகர்கள் தம்புரா கருவியுடன் இராம காவியத்தை இசைக்கிறார்கள். அந்த இன்னிசையில் புட்களும் பறக்க மறுக்கின்றன.

''உத்தர ராம சரிதம் ஒரு கற்பனைச் சித்திரமாக இருக்கலாம், விநோதா! என்றாலும் அதி உத்தமமான கற்பனை அது என்பதில் சந்தேகமில்லை. யாக்ஞவல்கியரைப் போன்ற மாமுனிவர்களை உடல் தொடர்புக்கென்றும் உள்ளத் துணைக்காகவும் இரு மனைவியரை மணம் புரிந்து கொண்டிருந்த அந்த யுகத்தில் இறைவன் மூன்று மனைவியரைக் கொண்ட தந்தையின் மகனாக மானிட தர்மம் எது என்பதைக் காட்டுவதற்காக ஓர் அவதாரம் எடுத்தான் பார். அது பாரத சிந்தனையின் இமயம்....

''வெளிப்படையாகவே சொல்கிறேனே, குமுதவல்லியைப் பற்றித்தானே நீ பேச எண்ணினாய்?'' திலகன் விநோதாவை ஏறிட்டுப் பார்த்தார். அவள் கண்களைத் தாழ்த்திக் கொண்டாள்.

''என்னுடைய நலனுக்கும் உன்னுடைய உரிமைக்கும் பங்கம் ஏற்படாத வகையில் அவளை நம்முடையவளாகச் செய்துகொள்ள முடிவு செய்துவிட்டேன். சட்டபூர்வமான நடவடிக்கைகளை மேற்கொள்ளும் முன்பு உன்னைக் கலந்து கொள்ளுவதற்காகத்தான் இங்கு வந்தேன். விநோதா, இந்த ஜன்மத்தில் நமக்கும் ஒரு பெண் குழந்தை வேண்டாமா?'' திலகனின் வாய்மொழி பூக்களைப் போல் உதிர்ந்தன.

அந்த மலர்களின் மணம் விநோதாவைக் கிறங்க அடித்தது. தன்னுடைய துன்ப நினைவுகளையெல்லாம் அந்த மணம் கரைத்துக் கொண்டு தொலைவில் பறந்து போவதை அவள் உணர்ந்தாள்.

## இரு ஆசாரியர்களின் ஜயந்தி

அத்வைத ஆசாரியர்களான ஸ்ரீ ஆதி சங்கரரின் ஜயந்தி, விசிஷ்டாத்வைத ஆசாரியர்களான ஸ்ரீ ராமாநுஜரின் ஜயந்தி ஆகிய இரு புனித தினங்களும் ஒரே நாளில் அமைவது நமது சமய ஒற்றுமைக்கு ஒரு நல்ல சான்று அல்லவா? இவ்வாண்டு இவ்விரு மகாபுருஷர்களின் ஜயந்தி ஏப்ரல் 25ந் தேதியன்று நிகழ்ந்தது. சமீபகாலமாக ஆசாரியர்களின் ஜயந்தியில் மக்களுக்கு அதிக ஆர்வம் ஏற்பட்டுப் பேட்டைதோறும் இத்திருவிழாக்கள் கொண்டாடப்பட்டு வருகின்றன. இவ்வாண்டு இந்த ஆஸ்திக நடவடிக்கைகள் உச்ச கட்டத்தை அடைந்தன எனலாம். இவ்வாண்டு சங்கர ஜயந்தியின் ஒரு விசேஷம் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்தின் ஆசாரிய பூஜை விழுப்புரத்தில் இன்றைய பீடாதிபதிகள் ஜனித்த இல்லத்தில் கொண்டாடினார்கள். சங்கர ஜயந்தி பூஜை நடைபெற்ற இல்லத்தின் வாயிலில் ஸ்ரீ ஆசாரிய சுவாமிகள் எழுந்தருளிய காட்சியை நேயர்களுக்கு இங்கு தரிசனம் செய்விக்கிறோம்.






சகோதரி ஆதர்ச நிலை என்று எதைக் கருதினாளோ அந்த அளவுக்குக் கமிட்டி அங்கத்தினர்கள் செல்லத் தயாராக இல்லை. முதற்படியாகப் பதினாறு வயதுக்குமுன் எந்தப் பெண்ணும் மணக்கக் கூடாது என்று கமிட்டி சிபாரிசு செய்திருந்தாலே சகோதரி வெகுவாகத் திருப்தி அடைந்திருப்பாள்.

ஆனால் 1929ம் ஆண்டு ஜூன் மாதத்தில் அறிக்கை வெளி வந்தபோது அவளுக்கு மிகவும் ஏமாற்றமாகி விட்டது. பெண்கள் கல்யாணம் செய்து கொள்ளக் குறைந்தபட்சம் பதினான்கு வயதினராக இருக்க வேண்டும் என்று கமிட்டி சிபாரிசு செய்திருந்தது. அதே சமயம், ஒரு கணவன் தன் மனைவிக்குப் பதினைந்து வயதாகும்வரை அவளுடன் சேரக் கூடாது என்றும், அப்படிச் செய்தால் அது குற்றமாகக் கருதப்படும் என்றும் குறிப்பிட்டது. கல்யாணமாகாத பெண்களுக்குச் சம்மத வயது பதினெட்டாக உயர்த்தப்பட வேண்டும் என்றும் சிபாரிசு செய்தது.

பல சீர்திருத்தவாதிகளுக்கு இந்த அறிக்கை திருப்தி அளிக்கவில்லையாயினும், வைதிகமானவர்களிடமிருந்தும் சினக் கூப்பாடுகள் எழுந்தன. தங்களுடைய குடும்பங்களுக்கு எது நல்லது எது சிறந்தது என்று நிர்ணயிக்கும் உரிமையை மக்களிடமிருந்து பறிக்க வந்த அபாயகரமான முயற்சி அது என்று அவர்கள் கமிட்டியின் சிபாரிசுகளை வன்மையாகக் கண்டித்தனர். "வைதிகப் பிராமணர்களின் விருப்பங்களுக்கு மாறாகச் சட்டம் கொண்டு வருவதினால் பெரிய தீமைகள் விளையப் போகின்றன. இந்தியா பூகம்பங்களுக்கும், புயல் காற்றுகளுக்கும் வேறு பல விபரீதங்களுக்கும் உள்ளாகப் போகிறது" என்றெல்லாம் சென்னையில் ஒரு பிராமணர் பயமுறுத்தினார்.

## 8

வயதானவர்கள் உறங்குவது மிகவும் குறைவு என்ற பொதுவான நம்பிக்கை அவ்வளவு உண்மையாகத் தோன்றவில்லை. "நான் இன்றைக்கும் நன்றாக உறங்குகிறேன். என்றுமே அப்படித்தான். அதுவும் என்னுடைய நல்லதிர்ஷ்டத்தின் ஓர் அம்சம் போலும்" என்று சகோதரி என்னிடம் ஒரு நாள் கூறினார்.

"உங்களுடைய மனச்சாட்சி உங்களை உறுத்தாது. தொல்லை கொடுக்காதது இதன் காரணமாயிருக்கலாம் இல்லையா?" என்றேன் நான்.

அவர் சிரித்தார். சகோதரிக்கு அவருடைய மனசாட்சி என்றுமே தொல்லை கொடுத்ததில்லை என்பதை அந்தச் சிரிப்பே உறுதிப்படுத்தியது. அவர் கூறினார்: "நான் லண்டனில் வசித்தபோது ஒன்பது மணிக்கெல்லாம் படுக்கச் சென்று விடுவேன். உடனே உறங்கி விடுவேன். காலையில் ஐந்து மணிக்கு எழுந்து விடுவேன்." பழைய நினைவில் அவர் கண்கள் பிரகாசித்தன. "ஒரு

நான் சாயங்காலம் இருட்டுவதற்குச் சிறிது முன் நான் சில பெண்களை மூன்றாவது மாடி வராந்தாவுக்கு அழைத்துச் சென்றேன். சூரியன் அஸ்தமிப்பதையும், நட்சத்திரங்கள் ஒவ்வொன்றாகத் தோன்றுவதையும் நாங்கள் பார்த்துக் கொண்டே இருந்தோம். அப்படியே நட்சத்திரங்களின் பெயர்களைச் சொல்ல ஆரம்பித்தோம். அந்த இரவு நேரம் மிகவும் ரம்மியமாக இருந்தது. நாங்களும் ரசித்து அநுபவித்துக் கொண்டிருந்தபடியால், நேரம் போனதே தெரியவில்லை. உள்ளே செல்வதற்கு நேரம் ஆகிவிட்டது என்று தீர்மானித்தபோது உள் அறையில் படித்துக் கொண்டிருந்த பெண்கள் உட்புறமாகக் கதவைத் தாளிட்டுவிட்டு, விளக்கையும் அணைத்து விட்டிருப்பதைக் கண்டோம். அவர்கள் சாப்பிடக் கீழே சென்ற போது எங்களைப் பற்றி அறவே மறந்துவிட்டிருந்தார்கள் என்பது தெளிவாகத் தெரிந்தது. நாங்கள் எங்களால் முடிந்த வரையில் சத்தம் போட்டோம். ஆனால், [illegible] சுவர்கள் மிகவும் பருமனாக இருந்ததினால் சத்தம் உள்ளே புகவில்லை. எங்கள் கூப்பாடு யார் செவியிலும் விழவில்லை. நாங்கள் கவலைப்படவில்லை. அப்பெண்கள் சாப்பாடு முடிந்து மாடிக்கு வருவார்கள் என்று எங்களுக்குத் தெரியும். அரை மணி நேரம் கழித்து அந்த அறையில் விளக்குகள் எரிந்தன. நான் ஜன்னலைத் தட்டினேன். உள்ளே இருந்த பெண்கள் திரைச் சீலைகளை அகற்றிப் பார்த்தனர். வெளியே மிகவும் இருட்டாக இருந்தபடியால் அவர்கள் கண்களுக்கு ஒன்றும் தென்படவில்லை. அவர்கள் எங்கள் ரூபங்களை அடையாளம் கண்டு கொள்ளவுமில்லை. இரவு நேரத்தில் மாடி வராந்தாவுக்கு எப்படியோ ஏறிவந்து யாரோ கதவைத் தட்டுகிறார்களே என்று அவர்கள் பயந்து நடுங்கிவிட்டார்கள்.''

சகோதரி மீண்டும் சிரித்தார். அந்த அநுபவத்தை நினைவுகூர்ந்து ''எங்களால் அவர்களைப் பார்க்க முடிந்தது. அவர்களுக்கு எங்களைத் தெரியவில்லை. அவர்கள் வாயிற்காப்போனை அழைக்க அறையை விட்டு வெளியே பாய்ந்தோடிச் சென்றார்கள். அவன் தோட்டக்காரர்களை அழைத்துக் கொண்டு வந்தான். பலசாலிகளான அம்மனிதர்கள்கூட நடுக்கமுற்றனர். நாங்கள் திருடர்கள் என்று அவர்கள் நினைத்துவிட்டார்கள். எங்கள் சத்தம் அதிகரிக்க அதிகரிக்க மேலும் மேலும் அவர்கள் பயப்படலாயினர். கடைசியில் காலை வரை அங்கேயே இருக்க வேண்டியதுதான் போலும் என்று நாங்கள் நினைத்து விட்டோம்.''

''அப்புறம்?''

''தைரியசாலியான சித்திதான் வந்து எங்களைக் காப்பாற்றினாள்.''

சகோதரி செய்த எந்தக் காரியத்துக்கும் சித்திதான் உறுதுணை. ஒரு நாள் விடியற்காலை தென்னை மரத்தின் மீது ஒரு திருடன் தேங்காய் பறித்துக் கொண்டிருப்பதைச் சித்தி பார்த்து விட்டாள். ஒரு பெரிய கயிற்றை எடுத்து வந்து அம்மரத்தைச் சுற்றிச் சுருக்குமுடி போட்டுக் கட்டி விட்டாள்.



## புதர் விடுவித்த புதிர்!

**(சிங்காரத்தின் ஊகங்கள்)**

1. சமையலறையில் திருடன் சோற்றுடன் எதையோ கலந்து சாப்பிட்டிருந்தான். அதைப் பாலு ஒரு விரலால் எடுத்துச் சுவைத்த போது நாக்கைப் பொறித்தது அதன் காரம். ஆவக்காய் ஊறுகாயைச் சோற்றுடன் கலந்து சாப்பிட்டிருக்கிறான் திருடன் என்பதை அறிகிறான் சிங்காரம். காரம் அதிகம் உண்பவர்கள் ஆந்திரர்கள் என்பதைச் சொல்லவா வேண்டும்? அதற்கு ஏற்றபடி, கூடத்திலுள்ள குச்சிப்புடி நடன பொம்மையின் அருகே புகைத்த சிகரெட் துண்டுகள் கிடந்தன. அது திருடன் அந்தப் பொம்மையின் அருகே வெகு நேரம் நின்று கொண்டிருந்திருக்கிறான் என்பதை உணர்த்திற்று. ஆகவே, கள்ளனானாலும் கலை உள்ளம் கொண்டவன் திருடன். அவன் ஆந்திரக்காரன் என்பவைகளைக்கொண்டு மாஜிக் கைதிகளின் ரிக்கார்டுகளை ஆராய இந்தக் குணங்களுக்குப் பொருத்தமாக லிங்கையா கிடைக்கிறான்.

2. லிங்கையாவின் அறையில் உள்ள 'ஆஷ் டிரே'யில் குடித்து நசுக்கப்பட்டுக் கிடந்த துண்டுகளில் கார்க் டிப்டு சிகரெட்டுகளும் சாதாரண சிகரெட்டுகளும் கலந்து கிடந்தன. லிங்கையாவோ 'கார்க் டிப்டு' சிகரெட்டுகளைத்தான் புகைத்துக் கொண்டிருந்தான். அப்படியானால் சாதாரண சிகரெட்டுகளைப் புகைத்த மற்றொருவன் அங்குதான் இருக்க வேண்டும் என்பது சிங்காரத்தின் ஊகமாகிறது.

3. முடிவாக, வெங்கையா, லிங்கையாவைக் குற்றவாளியாக்க உதவிய தடயம், வெங்கையாவினுடைய டாக்ஸியின் பம்பரில் சிக்கியபடி தொங்கிக் கொண்டிருந்த காட்டுச் செடிகளின் ஒரு கிளை. ஆவுடையாபிள்ளையின் வீட்டுக்குப் பின் பக்கமுள்ள புதரின் அருகே டாக்ஸியை நிறுத்தியிருந்த போது பம்பரில் அந்தச் செடி சிக்கிக் கொண்டிருந்திருக்கிறது. சிங்காரத்தின் தீட்சண்யமான கண்களுக்கு எந்தச் சிறிய விஷயமுமே பெரிய தகவல்களைச் சொல்லும் தடயங்களாக அமைந்து விடும்.



அவன் கீழே இறங்கி வந்த போது மாட்டிக் கொண்டு விட்டான். தன் மனைவியும், மக்களும் பசியோடு இருப்பதாகவும், அவனைச் சிறைக்கு அனுப்பி விட்டால் அவர்கள் பட்டினியால் இறந்து விடுவார்கள் என்றும் அவன் கெஞ்சிக் கேட்டுக் கொண்டான். சித்தியும், சகோதரியும் அவனை மன்னித்து விட்டார்கள். அவனுடைய குழந்தைகளை மீனவர் குழந்தைகளுக்காகத் தாங்கள் நடத்திய பள்ளியில் சேர்த்துக் கொண்டார்கள்.

வாசல் படிகளில் ஏறினவுடனே இருந்த கூடத்தில் சித்தி உறங்கி வந்தாள். அவள் ஆழ்ந்து உறங்குபவள் அல்ல. வெகு சிறு ஓசையும் அவளை எழுப்பிவிடும். அப்படியிருந்தும் சூரியோதயம் ஆகும்போது அக்காலை நேரத்தைப் போலவே, அவள் புத்துணர்ச்சியுடன் விளங்குவாள். இப்போது தூய உறவினைத் தவிர வித்தியாலயத்தையும் சமாளிக்க வேண்டியிருந்தும்கூட அவள் சலிப்படைந்ததாகத் தெரியவில்லை.

வித்தியாலயம் நன்கு வளர ஆரம்பித்து விட்டது. 1929 ஆம் ஆண்டு மாதர் சங்க அங்கத்தினர்களின் உதவியுடன் சகோதரி ஓர் ஆதரிச ஆரம்பப் பள்ளியைத் தொடங்கினாள். அது வித்தியாலயத்தையொட்டியிருந்தது. ஆசிரியைப் பயிற்சிப் பகுதியில் உள்ள மாணவிகள் இந்த ஆதரிசப் பள்ளியில் குழந்தைகள் பாடம் கற்றுக் கொள்வதைப் பார்த்தார்கள். தாங்களே கற்றுக் கொடுத்தும் பயிற்சி பெற்றார்கள். அதே சமயம் மாணவிகள் தங்கும் விடுதி இன்னும் பெரிய வீட்டுக்கு மாற்றப்பட்டது. சீக்கிரத்திலேயே அதுவும் போதவில்லை. 1929 ஆம் ஆண்டு முடிவதற்குள்ளாகவே இடம் இல்லாததால் சேர்வதற்காக மனுச் செய்து கொண்டவர்களைத் திருப்பி அனுப்ப வேண்டியிருந்தது.

மறுப்பது மனதுக்கு மிகவும் கஷ்டமாக இருந்தது.

கூடுமான வரை சகோதரி ஏமாற்றமளிக்காமல் சேர்த்துக் கொள்ளவே விரும்பினாள். வேலையிழந்து நின்ற ஒரு சமையற்காரரின் மகள். அவள் தகப்பனார் முந்நூறு ரூபாய் கடன் வாங்கி அவளுக்காக வரதட்சிணை கொடுத்தார். கல்யாணம் முடிந்து அவள் தன் புக்ககத்தில் வசிக்கச் சென்றாள். அங்கு சென்ற பிறகுதான் அவள் தன் கணவனுக்கு ஏற்கனவே மூன்று மனைவிகள் இருப்பதை அறிந்தாள். அவர்களில் இருவர் அவனுடன் தங்கியிருப்பதையும் கண்டாள். அவனும் அவன் பெற்றோர்களும், அவ்விரு மூத்த மனைவிமார்களும் இப்புதுப் பெண்ணை மிகவும் கொடுமைப்படுத்தினர். ஒரு மனைவியின் முதல் கடமை சொன்னபடி செய்வது என்று உணர்த்தப்பட்டிருந்த அப்பெண், தனக்காகத் தன் தகப்பனார் பட்ட இன்னல்களையெல்லாம் நினைவில் கொண்டவளாய்ச் சில மாதங்கள் வரை மௌனமாகக் கொடுமைகளை அனுபவித்து வந்தாள். பிறகு அவள் கணவன் இனி அவள் தனக்குத் தேவையில்லை என்றும், அவள் போய்விட வேண்டும் என்றும் கூறிவிட்டான். இப்பொழுது அவள் வித்தியாலயத்தில் நன்றாகப் படித்துச் சீக்கிரமே உபாத்தியாயினியாக விளங்கப்போகும் நாளை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

சென்னை ராஜதானி முழுவதும் வித்தியாலயத்தின் புகழ் பரவியிருந்தது. பலர் உதவி கோரி சகோதரி சுப்புலக்ஷ்மிக்கு எழுதினார்கள்.

''ஏழு குழந்தைகளுடன் எனக்கு ஒரு தங்கை இருக்கிறாள்.'' — இப்படி ஒரு கடிதம் ஆரம்பித்தது. ''அவளுடைய கணவர் ஒரு சின்னப் பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயராகப் பணியாற்றி முப்பது ரூபாய் சம்பாதித்து வந்தார். ஒரு பைசாகூட வைக்காமல் இறந்து விட்டார். விதவையான என் தங்கையையும், புத்திசாலியான அவளுடைய ஏழு குழந்தைகளையும் வைத்துக் கொண்டு என்ன செய்வதென்றே தெரியவில்லை.....''

இப்படி ஒன்றா, இரண்டா? எத்தனையோ கடிதங்கள். ஒவ்வொன்றிலும் ஒரு சோகக் கதை இருந்தது.

போதுமான பணம் திரட்டி, சுற்றுப்புறம் நிறைய இடத்துடன் கூடிய பெரிய பங்களா ஒன்றை வாங்க வேண்டும் என்று நிர்மாணித்தார்கள். அப்பொழுது அங்கேயே தங்கிப் படிக்கும் மாணவிகள் நிறையப் பேர்களைச் சேர்த்துக் கொள்ள இயலும். பெண்களின் பலதரப்பட்ட வயதுகளுக்கு ஏற்பப் பலவகைப் பள்ளிகளையும் தோற்றுவித்து வளர்க்கலாம். இவற்றையெல்லாம் செய்வதற்கு ஒரு லட்ச ரூபாய் தேவைப்படும் என்று சாரதா மாதர் சங்கத்தினர் கணக்கிட்டார்கள். 1930ம் வருடத்துக்குள் இத்தொகையில் ஐந்தில் ஒரு பங்கு திரட்டி விட்டிருந்தனர். மாதர் சங்கத்தின் கல்விக் கமிட்டிக்கு நன்கொடைகளும், சந்தாத் தொகைகளும் வேகமாகவே வந்து கொண்டிருந்தன. வேண்டிய தொகையில் சரிபாதி சேர்த்துவிட்ட பிறகு சட்டப்படி அரசாங்கம் அதே அளவு பணம் அந்த நல்ல காரியத்துக்குத் தரும். சீக்கிரமே தங்கள் தேவைக்கு ஏற்றபடி ஒரு வீடு கிடைக்குமென்று அவர்கள் நம்பினார்கள்.

இதற்கிடையில் குழந்தை விவாகத்தை ஒழிப்பதற்கு இயக்கம் தொடர்ந்து நடந்து வந்தது. 1929 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் முதல் தேதி சட்ட சபையில் நிறைவேற்றப்பட்ட சாரதா சட்டம் ஆறு மாதங்கள் கழித்து அமுலுக்கு வந்தது. அது அதிகமாக ஒன்றும் சாதித்ததாகத் தெரியவில்லை. இன்னும் பார்க்கப் போனால், சட்டத்தைச் செயல்படுத்த ஆரம்பிப்பதற்குமுன், இருந்த ஆறுமாத இடைகாலத்தில் அச்சட்டத்தினால் என்ன பலன் விளைய வேண்டும் என்று எதிர்பார்க்கப்பட்டதோ அதற்கு நேர்மாறாகக் காரியங்கள் நடந்தன.

இப்புது மசோதா, சாரதா முதலில் நினைத்தது போல் இந்து சமுதாயத்தை மட்டுமல்லாமல் பிரிட்டிஷ் இந்தியப் பிரஜைகள் அனைவரையும் பாதித்தது. (தொடரும்)

# அசடு

**வனமாலிகை**

நீங்கள் எப்போதாவது குலசேகரம் பக்கம் போயிருக்கிறீர்களா? 'அது எங்கே இருக்கிறது?' என்று நீங்கள் முணுமுணுப்பது என் காதில் விழத்தான் செய்கிறது. தேசப் படத்தைப் புரட்டிப் பார்த்தால் ஏமாற்றம் அடைவீர்கள். அந்தப் பாவம் என்னைச் சேராமலிருக்கவே இந்த முன்னெச்சரிக்கை.

தர்மமிகு தமிழ் நாட்டின் ஒரு பகுதியான குமரி மாவட்டத்தின் கல்குளம் தாலுகாவின் படத்தை மேசை மீது விரித்துப் போட்டுவிட்டு, மேற்குத் தொடர்ச்சி மலையின் மேற்கு அடிவாரத்தில் இயற்கை யன்னை அழகுக் கோலம் பூண்டுவிட்ட பகுதியில் உங்கள் பார்வையைச் செலுத்துங்கள். நீங்கள் செய்த புண்ணியத்தால் பேச்சிப்



பாறை அணைக்குக் கீழே (படத்தில்) குலசேகரம் என்று எழுதியிருப்பது உங்கள் பார்வையிலிருந்து தப்பி விட்டால் அது உங்கள் கண்கள் செய்த பாவமாக இருக்கும் அல்லது பூதக் கண்ணாடி இல்லாத குறையாக இருக்கும். அது எதுவாக இருந்தாலும் நான் பொறுப்பாளியல்ல !

அந்த மலையில் அகில், சந்தனம், யானைத் தந்தம் — இவைகள் கிடைக்குமென்று நீங்கள் நினைத்தால் நாவைச் 'சப்பு'க் கொட்டிக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை. புளியங் கொட்டையளவுக்கு மலேரியாக் கொசுக்களும், உலக்கையளவுக்கு விஷப் பாம்புகளும், குளவியளவுக்கு அட்டைகளும் — மனிதனுக்குத் தொல்லை கொடுக்கும் விஷ ஜந்துக்கள் அனைத்தும் உலகம் முழுவதும் பரவ அங்கு உற்பத்தியாகின்றன.

பசையில்லாத குடும்பத்தில் பிறந்த தோஷத்துக்காக அந்த ஊருக்கு வெட்டி

யாக அல்ல — வேலையாக வந்து சேர்ந்தான் கிருஷ்ணன். மேற்குத் தொடர்ச்சி மலையின் மேற்கு அடிவாரத்தில் என்னென்ன பயிரிடலாம் — விஷ ஜந்துக்களை ஒழிப்பது எப்படி என்று இடத்தைப் பார்வையிட்டுச் சர்வே நடத்தி மேலே எழுதும்படி கிருஷ்ணனின் தலையில் எழுதப்பட்டு விட்டது. மேலதிகாரிகளும் குழந்தைகுட்டிகளைப் பெற்றவர்கள். அவனை அந்த விஷ ஜந்துக்களின் மத்தியில் நடமாடத்தான் சொன்னார்களே தவிர, தங்கச் சொல்லவில்லை. கிருஷ்ணன் தன் குடியிருப்பைக் குலசேகரத்தில் வைத்துக் கொண்டான்.

கிருஷ்ணனின் குடும்பம் சைவ உணவுகளைத் தவிர மற்றவைகளைப் பார்த்ததில்லை. அசைவ உணவுகளின் பெயர்களைக் கூறவே கிருஷ்ணனின் தந்தை கூச்சப்படுவார். அப்படிப்பட்டவன் குலசேகரத்தில் வந்து மாட்டிக் கொண்டதை என்னவென்பது?

வாழ்க்கைப் பிரச்னைக்கு வடிகால் தேடிக் கொண்டவன் வயிற்றுப் பிரச்னைக்கு வழி கிடைக்காமல் திண்டாடினான். இரண்டு நாட்கள் உள்ளூர் காப்பிக் கடை உணவு வயிற்றில் தாங்காமல் சென்ற வழியோடு திரும்பி விட்டது.

பாவம், அவன் நிலைமையை நினைத்து ஒரு துளி கண்ணீர் விடுங்கள்.

'பட்டினி கிடந்தாவது ஊரில் செத்துத் தொலைந்திருந்தால் பிணத்தைச் சுற்றி நாலு பேர்களாவது அழுவார்களே' என்ற ஞானம் உதயமானபோது, சமய சஞ்சீவியாக அவனுக்கு வாய்ச் சொற்களால் உதவியவன் பூயன். அவன் கிருஷ்ணனுக்கு உதவியாக மலைப் பகுதிக்குச் செல்லும் தினக் கூலி.

''குலசேகரம் சந்தைக்குப் பக்கத்திலே ஓர் ஆயா அஞ்சாறு வாத்தியாருக்குச் சமைச்சிப் போடுறா. அவகிட்டே நீங்க கேட்டுப் பார்த்தீங்களா?''

தாகத்தால் நாக்கு வறண்டவன், தண்ணீரைக் கண்டதும் ஆலாய்ப் பறப்பதைப் போல, ''பூயா, எனக்குத் தெரியாது. இன்னைக்கே அந்த ஆயாவைப் போய்ப் பார்த்தாகணும்'' என்றான்.

''சரிங்க.''

''அங்கே மீன் இறைச்சி...?''

''மூச்சு விடாதீங்க. ஆயா பக்கத்திலே அந்த வாடையே அடிக்கக் கூடாதுங்க. நாஞ்சி நாடு. சுத்த சைவம் ஆயா.''

ஆயாவைச் சரிக்கட்டுவதற்குள் கிருஷ்ணனுக்குப் போதும் போதும் என்றாகி விட்டது. இத்தனையும் மேலதிகாரியிடம் கெஞ்சியிருந்தால் அவன் நினைத்த ஊருக்கே மாற்றல் கொடுத்திருப்பார்.

அலுவலக சட்ட திட்டங்கள் சில வேளைகளில் ஆளுக்குத் தகுந்தாற்போல் தளர்த்தப்படுவதுண்டு. ஆனால் ஆயாவின் சட்ட திட்டங்கள் ராணுவ சட்டதிட்டங்களைவிடக் கடுமையானது.

காலை ஏழு முதல் ஒன்பது மணிக்குள் காலை 'டிபனை' முடித்துக் கொள்ள வேண்டும். சரியாகப் பன்னிரண்டு மணி முதல் இரண்டு மணி வரைக்கும் சாப்பாடு. ராத்திரியும் டிபன். எட்டு மணிக்குள் ஆயா தன் வீட்டின் முன் கதவை இழுத்துப் பூட்டி விடுவாள்.

ஒரு வேளை சாப்பாடோ டிபனோ வேண்டாமென்றால் குறைந்தது இருபத்துநான்கு மணி நேரத்துக்கு முன்னுவது நோட்டீஸ் கொடுக்க வேண்டும். கொடுக்கத் தவறி விட்டால் சாப்பிடாத ஆகாரத்துக்கும் உரிய கட்டணத்தைத் தண்டனை என்ற பெயரில் 'தண்டமாக' அழ வேண்டும்.

ஒரு நாள் ஒருவர் காலை ஒன்பதேகாலுக்குச் சென்றார். அவர்பாடு திண்டாட்டமாகி விட்டது.

''கையிலே கடிகாரம் வேறு கட்டியிருக்கீங்க. மணி ஒன்பது தாண்டியாச்சு. உங்க வரவை எதிர்பார்த்துக் காத்திருக்க நீங்க தாலி கட்டிய பெண்டாட்டி யாரும் இங்கே இல்லே. பேசாமல் வந்த வழியைப் பார்த்துப் போயிடுங்க.''

வாய்க்கு ருசியாகச் சமைத்துப் போடுகிறவள் வாயிலிருந்து காரமான வார்த்தைகளா வர வேண்டும்?

சாப்பிடப் போகிறவர்கள் மூச்சுவிடக் கூடாது. 'வரணும், சாப்பிடணும். பேசாமப் போயிடணும்' — இந்த மூன்று தாரக மந்திரங்களிலிருந்து அணுவளவும் பிசகக் கூடாது. இவற்றை மீறுகிறவர்கள் மறு வேளை அந்தப் பக்கம் கால் நீட்டக் கூடாது!

அரசாங்கக் கெடுபிடிகளைவிட ஆயாவின் கெடுபிடிகள் ஆளைக் கடித்தன என்றாலும் வயிறு ஒன்று இருக்கிறதே!

கிருஷ்ணனைப் பொறுத்த வரைக்கும் திருப்தி!

இரண்டு மாத கோடை விடுமுறைக்காகப் பள்ளிக்கூடத்தை மூடி விட்டார்கள். உண்மையான கோடை போய் ஒன்றரை மாதம் கடந்து விட்டது. உலகம் மாறுகிறது! கால நிலையும் மாறுகிறது. விடுமுறை காலம் மட்டும் மாறுவதில்லை.

கோடை விடுமுறை காலத்தில் ஆசிரியர்கள் பிறந்த மண்ணைத் தரிசிக்கப் போய் விடுவார்கள். ஆயாவும் உறவினர்கள் வீட்டுப் படிகளை மிதிக்க விரும்பி, ஊர் சுற்றக் கிளம்பி விடுவாள்.

''தம்பி, எங்கிட்டே இது வரைக்கும் வாத்தியார்மாரைத் தவிர வேறு யாருமே சாப்பிட்டதில்லே. நானும் பத்து மாசம் அவங்களுக்காக உழைச்சிட்டு, ரண்டு மாசமும் ஷராய்யா உறவினர்களைப் பார்க்கப் போயிடுவேன். இந்த வருஷமும் அப்படித்தான். நீங்களும் 'லீவ்' போடுங்க. இல்லே வேறே இடத்திலே சாப்பாட்டை வைச்சுக்கிடுங்க.'' சக்தி வாய்ந்த அணுகுண்டை அவன் இதயத்திலே எறிந்துவிட்டாள் ஆயா. கிருஷ்ணன் பொறி கலங்கிப் போனான்.

வேலையில் சேர்ந்து சரியாக மூன்று மாதங்களாகவில்லை. அதற்குள் இரண்டு மாத லீவா? அரசாங்க உத்தியோகம் என்பது 'பாட்டையா' வீட்டுப் பரம்பரைச் சொத்தா?

''உங்களை விட்டால் வேறு வழியில்லே ஆயா. 'லீவ் போட்டா ஒரேயடியா வீட்டுக்கே அனுப்பிச்சுடுவாங்க.'' ஆண்பிள்ளை என்பதால் மட்டும் கண்ணீர் வரவில்லை.

''யோசித்துப் பார்த்து நாளைக்குச் சொல்கிறேன்'' என்று மதில் மேல் பூனையாகி விட்டாள் ஆயா.




# சில ஆகாரங்கள் உங்களுக்கு ஒத்துக்கொள்ள வில்லையா?

அனேக ஜனங்கள் ஆகார க்ரமக் குறைவால் அஜீரணம், அல்லது மலச் சிக்கல் முதலியவைகளால் அவதிக்குள்ளாகிறார்கள். அப்பொழுது உங்களுக்கு பிலிப்ஸ் மில்க் ஆப் மெக்னீஷியா தேவைப்படுகிறது.

ஆகார க்ரமக் குறைவால் உங்களுக்கு ஏற்படும் புளிப்பான ஏப்பம், வயிற்றில் ஏற்படும் எரிச்சல், குமட்டல் முதலியவற்றை ஒரு நொடியில் நிவர்த்தி செய்கிறது.

மலச் சிக்கல், அதனாலேற்படும் சோர்வு முதலிய உபாதைகளை நீக்கி, பூரண உடல் நலம் பெறுவதற்கு பிலிப்ஸ் உதவுகிறது.

அதனால் அடுத்த முறை அதிகப்படியான உணவு உட்கொள்ள நேரிட்டால், உடனடியாக பிலிப்ஸ் மில்க் ஆப் மெக்னீஷியா உபயோகிக்கவும். அது பலனளிக்கும்!




# பிலிப்ஸ்

## மில்க் ஆப் மெக்னீஷியா

மான்யுபாக்சரர் : ரிஜிஸ்டர்ட் யூஸர்

டேய்ஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் (மான்யுபாக்சரிங்) பிரைவேட் லிமிடெட்,

62, பென்டல் ரோட், கல்கத்தா-19



## 2% மட்டும்

# அக்கோப்ரூ:ப்

**உபயோகித்தால் கட்டடங்களிலும், நீர் சேமிப்பு தொட்டிகளிலும் கசிவில்லாமல் 100% பாதுகாப்பு பெறலாம்!**



அக்கோப்ரூ:ப்
சுவரின் மேல் பூச்சு
மற்றும் காரைப்பூச்சு
வேலைகளுக்கு



அக்கோப்ரூ:ப்
ஈரம் தங்கக்கூடாத
நடைபாதைகளுக்கும்,
டெர்ரஸ் மாடிகளுக்கும்



அக்கோப்ரூ:ப்
அஸ்திவாரத்தளங்களுக்கும்
சுவர்களுக்கும்



அக்கோப்ரூ:ப்
நீர்த்தொட்டிகளுக்கும்,
நீர்வாய் மற்றும்
குழாய்களுக்கும்

ஒழுக்கு, கசிவு, ஈரம் இவற்றைத் தடுக்க **அக்கோப்ரூ:ப்** உபயோகியுங்கள்

அக்கோப்ரூ:ப்
-ஸிமென்டுக்கு நீர்க்கசியாத்
தன்மையை அளிக்கும்
ஏஸிஸி யின் கலவைப்
பொருள்—20 கிலோ டிரம்
களிலும் 1 கிலோ அட்டைப்
பெட்டியிலும் கிடைக்கிறது.
உங்களருகில் உள்ள,
தி ஸிமென்ட் மார்க்கெட்டிங்
கம்பெனி ஆ:ப் இந்தியா
லிமிடெட் அலுவலகத்திலோ
விநியோகஸ்தர்களிட
மிருந்தோ பெறலாம்.







**இலவச தொழில்நுட்ப ஆலோசனை**
கான்க்ரீட் அஸோஸியேஷன் ஆ:ப் இந்தியாவின் பம்பாய், புது டில்லி, கல்கத்தா மற்றும் ஸிகந்திராபாதில் உள்ள இன்ஜினியரிங் நிபுணர்களின் தொழில்நுட்ப ஆலோசனையை இலவசமாகக் கேட்டுப் பெறுங்கள்.

தி அஸோஸியேடட்
ஸிமெண்ட் கம்பெனீஸ்
லிமிடெட்
தி ஸிமென்ட்
மார்க்கெட்டிங் கம்பெனி
ஆ:ப் இந்தியா லிமிடெட்




JWT-CHI. 4357

'கடவுளே அந்தப் பூனை என் பக்கம் குதிக் கட்டும்' என்று அவன் நினைக்க மறந்துபோன தெய்வங் களையெல்லாம் வேண்டிக் கொண்டான்.

நெஞ்சு 'படபட' வெனத் தாளம் போட, குற்றவாளிப் பத்திரத் தைச் சிரமேற் தாங்கி மேலதிகாரியைச் சந்திக்கச் செல்லும் சிப்பந்தியாக ஆயாவைப் 'பேட்டி' காணச் சென்றான் கிருஷ் ணன்.

ஆயா சம்மதித்து விட்டாள்.

'இந்த நல்ல இதயம் படைத்தவனுக்கு ஏன் குழந்தையைக் கொடுக்கத் தவறிவிட்டாய் இறைவா!' என்று கடவுளின் மீது கிருஷ்ணன் பாய, 'ஆயா வுக்குக் கல்யாணமாகல் லியே, எப்படிக் குழந்தை பிறக்க முடியும்' என்று தன் மனம் ஆறுதல் கூறிக் கொண்டது. இதயம் 'கலீரெ'னச் சிரித்து விட்டது.

''தம்பீ, எங்கிட்ட ஒரு குமரிப் பொண்ணு வேலைக்கு இருக்கா. அவதான் உங்களுக்குச் சமைச்சுப் போடுவா. அது சமைச்சுப் போடு வதைச் சாப்பிடணும். குத்தம் சொல்லக் கூடாது. உங்க குணம் தங்கமானது; முழுக்க முழுக்க நம்பித்தான் இந்த ஏற்பாடு செய் திருக்கேன். அது கொஞ்சம் அசடு. தத்துப் பித்துன்னு ஏதாவது உளறும். அது என் ஒருத்திக்குத்தான் பயப்படும். அதுக்கும் என்னை விட்டா வேறு 'நாதி' இல்லே...''

''வெறும் சாதம் வடிச்சுக் கொடுத்தாப் போதும் ஆயா!''

''வாங்கிற துட்டுக்கு வஞ்சனை இல்லாம ஆக்கிப்போடணுங்கிற நினைப்புள்ளவ நான்.''

''அதுக்கென்ன, நீங்க வந்தப்புறம் பார்த் துக்கலாம்.''

ஆயா பட்டணப் பிரவேசம் கிளம்பி விட்டாள்.

முதல் நாள் கிருஷ்ணன் தயங்கித் தயங்கித் தான் உள்ளே போனான். அசடு ஆள் மீதும் பாயலாம்; காலையும் சுற்றலாம். எல்லாம் ஆபத்துதான்.

முன் பக்கம் ஆள் அரவமே இல்லை.

தொண்டையை இலேசாகக் கனைத்துக் கொண்டான்.

சில விநாடிகளில் காப்பி பலகாரங்களு டன் முன் பக்கம் வந்தாள் அவள். அவன் முகத்தைக் கூட ஏறிட்டுப் பார்க்க வில்லை.

காப்பிக்குச் சீனியே போடவில்லை. அந்தக் கசாயத்தை எப்படியோ விழுங்கி வைத்தான்.

அவளைப் பார்த்தால் அசடு என்று சொல்ல முடியாது. எளியவர்கள் மீது சிலர் வேண்டுமென்றே சிலதைத் திணிப்பதில் லையா? ஆயாவும் அவளுக்கு அசடு பட்டாபிஷேகம் நடத்திவிட்டாள்போலும்.



''என் மனைவி இப்பத்தான் ஆபீஸ் கிளம்பினாள். உடனே வீட்டைப் பூட்டிக் கொண்டு வந்துட்டேன்!''

''கொஞ்சம் இருங்க! என் மனைவி இன்னும் ஆபீஸ் கிளம்பலே. அவ போனதும் நாம டிக்கிலோ ஆடலாம்!''

மாடாக உழைத்ததால் ஏற்பட்ட வாளிப்பான தேக வாகு; மாந்தளிர் நிறம். கல்லூரிக் காளைய ரின் கனவுகளில் சஞ்சரிக் கும் கன்னியின் இலட்ச ணங்கள் அவளிடமில்லை. இருபது வயதுக்கேற்ற முகப்பொலிவும், பருவத் துக்கேற்ற கவர்ச்சியும் இருக்கத்தான் செய்தன.

இரண்டு மூன்று தினங் கள் நழுவி விட்டன.

கிருஷ்ணன் சாப்பிட்டுக் கொண்டிருந்தான்.

''என்னங்க, சமையல் எப்படி?''

அவன் முகத்தைப் பரி தாபமாகப் பார்த்து விழித் தான் அவன்.

''சமையல் எப்படின்னு கேட்டேன்'' என்றவள் 'கொல்'லென்று சிரித்துவிட்டாள். அவன் குற்றுயிராகித் தலை குனிந்துகொண்டான்.

''ஆம்புளையா நிமிர்ந்து பாருங்க.''

அவனது ஆண்மைக்கொரு சவுக்கடி!

''சமையல் நல்லாயிருக்கு''-இதைச் சொன் னதால் தொண்டையில் ஏற்பட்ட வறட்சி யைப் போக்க ஒரு 'மடக்கு' ஜலம் குடித்தான்.

அன்றைக்கு அவனும் அரை வயிற்றுக்குச் சாப்பிட முடியவில்லை

ஒரு வாரத்துக்குள் அவனுள்ளும் 'தெம்பு' பிறந்து விட்டது.

ஒரு நாள்...

''வெளியே போங்க...'' என்று அவள் துரத்தினாள்.

''அஞ்சலை, உனக்கு இன்று என்ன வந்தது?''

''வெளியே போறீங்களா என்ன? காலிலே செருப்பை மாட்டிட்டு வீட்டுக்குள்ளே வந் திட்டீங்களே?''

தன் தவறு அப்போதுதான் அவனுக்குப் புரிந்தது.

''அப்படியே நில்லுங்க. இன்னும் வீட்டை அசுத்தப் படுத்தாதீங்க'' என்றவள் அவன் காலிலுள்ள செருப்புக்களைக் கழற்றி வெளியே வைத்தாள்.

அவன் சாப்பிடும்போது அவள் பக்கத்தில் உட்கார்ந்துவம்பளக்கத் தொடங்கிவிட்டாள். அதில் பெரும்பாலும் ஊர்க் கதைகளும்—பெண்களைப் பற்றியுமே அதிகம் பேசுவாள்.

''நான் ஒண்ணு கேட்பேன். வாங்கிக் கொடுப்பீங்களா?'' என்று கேட்டது அசடு அஞ்சலை.

''ம்... என்னது?''

''ஒரு நாளாவது எனக்கு வாசனைச் சோப்பு போட்டுக் குளிக்கணும்கிற ஆசை இருக்கு. உங்க சோப்பைக் கொண்டு வருவீங்களா?''

''புதுசா ஒண்ணு வாங்கிடப் போச்சு.''

அஞ்சலை அசடு என்பதை அவன் உள்ள மும் ஒப்புக் கொண்டது.

"ஆயாவுக்குத் தெரிஞ்சா தோலை உரிச்சுப் புடுவாள்."

"அதுக்குள்ளே கரைஞ்சி போயிடுமே?"

வாசனைச் சோப்புப் போட்டுக் குளித்த அஞ்சு. 'என் கை மணக்கிறதா பாருங்கள்' என்று தன் முழங்கையை அவன் மூக்கின் மேல் வைத்தாள். அவனும் "ம்...கமகமன்னு வாசனை வீசுதே" என்று சொல்லி வைத்தான்.

அன்று ஆபீஸ் விஷயமாக நாகர் கோயிலுக்குப் போய்த் திரும்பும்போது இரவு பத்தரை மணியாகி விட்டது. 'டிபனை' நாகர் கோயிலில் முடித்துக் கொண்டு விட்டான்.

ஆயாவின் வீட்டைக் கடந்துதான் அவனுக்குச் செல்ல வேண்டும். வீட்டின் முன் பக்கத்தில் அரிக்கேன் விளக்கை வைத்துக் கொண்டு அஞ்சலை காத்திருந்தாள். அவனைக் கண்டதும் பரபரப்புடன் எழுந்தாள்.

"மலையிலே ஏதாவது நடந்திருக்குமோன்னு எனக்குப் பயமா இருந்திச்சு. எங்கே போயிருந்தீங்க?" என்றாள்.

"திடீர்னு நாகர்கோயிலுக்குப் போக வேண்டியிருந்தது."

"காப்பி போடட்டுமா?"

"நாகர்கோயில்லே டிபனை முடிச்சிட்டேன். இங்கேதான் எட்டு மணியோட தீர்ந்துடுமே!"

"அது ஆயாவின் ஆட்சியில். அஞ்சலை உங்களுக்காக..."

"உங்களுக்காக... அப்புறம் சொல்லு."

"போங்கன்னு..." பெண்மை சிறப்புப் பெற்று விட்டது.

"உனக்காக மல்லிகைப் பூ வாங்கியாந்திருக்கேன்."

"நான் வாங்கிட்டு வரச் சொல்லலியே."

"சொன்னாத்தான் வாங்கணுமா என்ன?"

"சரி, இப்படிக் கொடுங்க" என்றவள் கையை நீட்டினாள். அவன் தயங்கினான்.

"கையிலே கொடுக்கிறீங்களா என்ன?" அவள் அதட்டினாள். அசட்டைப் பற்றி அவன் ஆசை பொலபொலவென வீழ்ந்தது.

தலையில் பூச்சூடியவள் நெஞ்சில் சாய்ந்த கதாநாயகியைச் சினிமாவில் பார்த்தது சமயத்தில் அவனுக்கு நினைவில் வந்து காப்பாற்றியது. அவன் முகத்தில் அசடு வழிந்தது.

"அஞ்சலை, நீ இன்னும் ஏன் கல்யாணம் பண்ணிக்கல்லே?"

"அவசியம் ஏற்படல்லே."

"ஏன் அவசியம் ஏற்படல்லே?"

"இந்த அசடை யார் கல்யாணம் பண்ணிக்குவா?"

"நீ அசடுன்னு சொன்னது யார்?"

"எல்லோரும்அப்படித்தான்சொல்றாங்க."

"நீ அசடு இல்லேன்னு நான் சொல்றேன்."

"சத்தியமாக் கேட்கிறேன், நான் அசடு இல்லையா? என் கையிலே அடிச்சுச் சத்தியம் பண்ணுவீங்களா?" அவள் பார்வையில் ஒளி கோலமிட்டது.

மயக்கக் கிறக்கத்தில் எதுவும் செய்யலாமல்லவா? அவள் கையில் அடித்துச் சத்தியம் செய்தான் அவன். அவளது தளிர்க் கரம் 'ஜில்'லென்று குளிர்ந்தது.

"நீ அசடு இல்லே."

"சரி."

"இனி கலியாணம் பண்ணிக்கலாமே?"

"பண்ணிக்க வேண்டியதுதான்... ஆமா, ஏன் கல்யாணம் பண்ணிக்கணும்?"

"கல்யாணம் பண்ணிக்கிட்டாத்தான் குழந்தை பிறக்கும்."

"உங்களுக்கு ஒண்ணுமே தெரியாது. கல்யாணம் பண்ணிக்காத செல்லாயிக்குக் குழந்தை இருக்கே."

அவன் வாயடைத்துப் போனான்.

"செல்லாயி கெட்டவள்... குழந்தைக்குத் தகப்பன் யார்?"

இதைக் கேட்டதும் கீழ்த் தாடையில் இடது கை ஆள்காட்டி விரலை ஊன்றி யோசிக்கத் தொடங்கிவிட்டாள். "எனக்கு இப்போ புரிஞ்சு போச்சு" என்றவள் 'விர்'ரென்று உள்ளே போய் விட்டாள்.

அன்று ஞாயிற்றுக்கிழமை. கிருஷ்ணனின் உள்ளத்தில் 'அது' முழுவதாக தெளிந்துகொண்டிருந்தது. காலைக் காப்பியை முடித்தவன் அந்த வீட்டை விட்டுக் கிளம்புவதாக இல்லை.

"அஞ்சலை, நீ சினிமாவுக்குப் போயிருக்கியா?"

"நானும் சினிமா பார்த்திருக்கேன்."

"நாகர்கோயில்லே நல்ல சினிமா வந்திருக்கு – பார்க்கப் போகலாம்னு..."

"அப்போ, ராத்திரி வரமாட்டீங்களா?"

"தனியாப் போறதுக்கும் விருப்பமில்லே."

"துணைக்கு யாரையாவது கூட்டிக்கிட்டுப் போங்களேன்."

"யார் வருவாங்க?"

"நான் வரட்டுமா?" என்றவள் குழந்தையாகச் சிரித்தாள்.

"உண்மையாகவா அஞ்சலை?"

இதயத்தில் பொங்கி வடிந்த போதை மயக்கத்தில் அவள் கரத்தைப் பற்றினான்.

"நம்மைப் பற்றி ஊரிலே என்ன பேசிக்கிறாங்கன்னு உங்களுக்குத் தெரியுமா?"

அவன் பரிதாபமாக அவளைப் பார்த்தான்.

"நாம புருஷன் பெண்சாதியாம். எனக்கு இப்போ உங்களைக் கல்யாணம் பண்ணிக்கலாம்னு தோணுது."

"என்னையா?"

"நான்தான் அசடு இல்லேன்னு சொல்லிட்டீங்களே? என்னைக் கல்யாணம் பண்ணிக்கிறதுன்னு உங்க கூட சினிமாவுக்கு வரேன்."

அவன் நாடி தளர்ந்தது; பிடி விலகியது!

"போய், மத்தியானம் சாப்பிட வாங்க."

"அஞ்சலை" என்றவன் வாலிபக் கிறக்கத்தில் அவள் தோள் மீது கையைப் போட்டான்.

அடுத்த கணம் அவன் கன்னத்தில் பளீரென அடித்து விட்டது அசடு! அசடு என்றாலும் உள்ளம் இருக்கத்தானே செய்யும்.

"என்னைக் கட்டிக்க விருப்பமில்லே. ஆனா ஊர் சுத்தக் கூட்டிக்கிட்டுப் போயி செல்லாயி மாதிரி என்னையும் நாலு பேர் கெட்டவன்னு சொல்ல வைப்பீங்க. நான் அசடுதான். எனக்கு ஒண்ணும் தெரியாது. இந்த மாதிரி எண்ணத்தோட இந்த வீட்டுக்கே வராதீங்க..." அசடு அனலைக் கக்கினாள்.

அதன் பிறகு அவன் முகத்தில் விழிக்க அவனுக்கென்ன பைத்தியமா பிடித்திருக்கிறது? மத்தியானம் வடித்த சாதம் தேடுவாரற்றுக் கிடந்தது.

அசட்டுக்கும் ஒருத்தன் பிறந்திருப்பான்!

# ஒப்பனை

பாரதநாட்டில் மலர்ந்த கலை, மனித முயற்சியின் வரலாற்றிலே மகத்தான பொன்னேடாக மிளிருகிறது. கல்லிலும் பாறையிலும் தெரிகின்றது நம் பழம்பெரும் கலையின் நினைவுமுகம். காலக் கொடுமைகளையும் பருவமோதல்களையும் கடந்துமிஞ்சி, இன்று தேசப் பொருட்காட்சிசாலைகளிலே பாதுகாக்கப்பட்டுவரும் அப் பொக்கிஷங்கள், கற்பனைச் சிறகடித்த ஆக்க எழுச்சிக்குக் கண்கூடான சான்றுகளாக நின்று, தம்மைப் பெற்ற மக்கள் சமூகத்திற்குப் பெருமைதருகின்றன.

ஒப்பனை என்றொரு சிற்பம்: (11-ம் நூற்றாண்டின்) காஜுராஹோ சிற்ப மண்டலத்திலே கொலுவிருக்கும் எழில்வடிவம்.

சிற்பக் களஞ்சியங்களுக்காக மட்டுமின்றி, கைவினைத் தொழில்களுக்காகவும் புகழ்பெற்றிருந்தது பழங்கால பாரதநாடு; நெசவுக் கலை நிபுணர்களும், சாயம் தோய்த்தோரும், வார்ப்படக் கம்மாளர்களும் அப் பழங்காலத்திலே எய்தியிருந்த கலைத்தேர்ச்சி என்றும் வியப்புக்குரியது.

தொழில் முன்னேற்ற யுகமாகிய இந்நாள், அப் பழங்காலத் தொழில்வல்லுனர்களின் பண்பாட்டைத் தழுவும் ராய்ப்பூர், தற்கால எந்திர வசதிகளின் உதவியால், நேர்த்திமிக்க நெசவுகளையும் துணிவகைகளையும் உற்பத்தி செய்கின்றனர்.

கோடு போட்ட & கட்டம்போட்ட ஷர்ட்டிங்
வெண்ணிற & சாயம்தோய்த்த பாப்ளின்
ப்ரிண்டெட் லான் & வாயில்
புட்டா—லினோ
ஸ்அப்பர்ஃபைன் வேஷ்டி
கேபர்டின் — கோட்டிங்






## ராய்ப்பூர் மில்ஸ் அஹமதாபாத்

TAN




- அரைகுறையாக ஓர் அவசரச்சட்டம்
- தடை நீங்குமா?
- உயர்ந்த படைப்பு
- பண்பாட்டுக்கு உகந்ததல்ல

சென்ற ஆண்டில் ஏற்பட்ட வறட்சி காரணமாக நிலச்சுவான்தார்களுக்கு வாரம், குத்தகை கொடுக்க இயலாத குடிவாரதாரர்களை நிலங்களிலிருந்து வெளியேற்றுவதைத் தடை செய்து தமிழ் நாடு கவர்னர் ஓர் அவசரச் சட்டம் பிறப்பித்திருப்பதை 22-4-66 தினசரிப் பத்திரிகைகளில் பார்த்தேன். குத்தகை பாக்கி என்பதற்குச் சரியான வியாக்கியானம் காணப்படவில்லை.

நிலத்தில் பாடுபட முடியாத ஸ்திரீ நிலச்சுவான்தார்களுக்கும் இந்த அவசரச் சட்டத்தால் பாதகம் ஏற்பட்டுள்ளதை எந்த விதமாக நிவர்த்தித்துக் கொள்வது? அவர்களால் கார் – சம்பா இரண்டுக்குமே உள்ள குத்தகையில் ஒரு பருக்கைக்கூடப் பெற முடியாமல் போகிறது. அதோடு 64-65, 65-66 ஆக இரண்டு ஆண்டுகளுக்கும் கிடைக்க வேண்டிய பாக்கிக்காக, ஏழை நிலச்சுவான்தார்கள் வழக்குத் தொடர எடுத்துக் கொண்ட பிரயத்தனம் இப்போது இச்சட்டத்தால் வீண் ஆகிவிட்டது. தன் சொந்த நிலத்தில் இருந்து கிடைக்க வேண்டிய குத்தகை, கைக்கு வருவதற்குமுன் 1375 பசலி கிஸ்தியை நகை நட்டுகளை அடகு வைத்துச் சர்க்காருக்கு முழுமையாகச் செலுத்தி நாணயமாக நடந்து கொண்டவர்களின் கதி என்ன? ஒன்றுக்கு முக்காலாவது கோர்ட்டு மூலம் வசூல் செய்து விடலாம் என்கிற அற்ப ஆசையையும் அவசரச் சட்டம் தகர்த்தெறிந்து விட்டது. இந்த அவசரச் சட்டத்தினால் எளிய நிலச்சுவான்கள் 1967 வருஷம் மே மாதம் பிறக்கும் வரையில் எத்தவிதமாகக் குடித்தனம் செய்வது? பாரபக்ஷமாக முன் யோசனையின்றித் திடீரென்று அவசரச் சட்டம் பிரகடனம் செய்யப்பட்டதனால் எவ்வளவோ எளிய நிலச்சுவான்தார்கள் பாதிக்கப்படுகிறார்கள். வறட்சி என்று காரணம் காட்டப்பட்டிருக்கிறது. தமிழ்நாடு முழுதும் வறட்சி ஏற்பட்டு விளைச்சல் இல்லாமல் போய் விட்டதா? சரியானபடி கார் மாசூல் விளைந்தும் சம்பாவில் நூற்றுக்கு எழுபத்தைந்து சதம் குறையாத விளைச்சல் விளைந்தும் உள்ள குத்தகைக்காரர்கள்கூட இந்த அவசரச் சட்டம் மூலம் அனுகூலம் அடைகிறார்கள். இதனால் சிறு நிலச்சுவான்தாரை ஏமாற்றி விட்டதாகவும், சர்க்கார் தங்கள் பக்கமாக இருக்கிறார்கள் என்றும் அசட்டு எண்ணம் அவர்களுக்குத் தோன்றும். நிலச்சுவான்தார் தொடரும் வழக்குகள் யாவும், பயனற்றதாகி விடும் என்கிற அசட்டுத் தைரியம் குத்தகைக்காரர்களுக்கு ஏற்படுவது இயல்பு.

வரகூர் — எஸ். பி. ஹரன்
25-4-66 — காங்கிரஸ் அபிமானி

இப்பவும் சேலம் மாவட்டம் ஆத்தூரில் எழுபத்தைந்து கிலோகிராம் நெல் நாற்பத்தைந்து ரூபாய்க்கு விற்கிறது. அதே நெல் அங்கிருந்து முப்பத்திரண்டு மைல் தூரத்தில் இருக்கும் சேலத்தில் 55 அல்லது 56 ரூபாய்க்கு விற்கிறது. சேலத்திலிருந்து 28 மைல் தூரத்தில் இருக்கும் திருச்செங்கோட்டில் அதே நெல் அறுபத்தைந்து ரூபாய்க்குக் கூட விற்கிறது! ஒரு மாவட்டத்தை விட்டு இன்னொரு மாவட்டத்துக்குத் தானியம் கொண்டு செல்லக் கூடாது என்பது இருந்தாலும் ஒரு தாலுகாவிலிருந்து இன்னொரு தாலுகாவுக்குக் கொண்டு போகக் கூடாது என்று இருக்கிற தடையை எடுத்துவிட வேண்டும். தவறான முறையில் திருட்டுத்தனமாக முறை தவறி அடிக்கப்படும் கொள்ளை லாபம் தடுத்து நிறுத்தப்படும். அரசாங்கம் கேட்கிற அளவுக்கு மேலேயே உணவுதானியத்தைக் கொடுக்கிற விவசாயிகளுக்கு நிர்ணயம் செய்யப்பட்ட விலைக்கு மேலேயே ஒன்று அல்லது இரண்டு ரூபாய் அதிகமாகக் கொடுப்பதாகக் கூறுகிறது அரசு. இப்படிக் கொடுப்பதைக் காட்டிலும் உணவு உற்பத்தி செய்கிறவர்களுக்கு நில வரியை ரத்து செய்துவிட்டால் உணவு உற்பத்தியில் ஆர்வத்துடன் வேலை செய்வார்கள்.

திருச்செங்கோடு — ப. கந்தசாமி

நம்மைக் கலக்கத்தில் ஆழ்த்தி விட்டுக் கண்ணீரில் முடியும் 'ஜடாதரனின்' ''ரங்கனும் நானும்'' ஓர் உயர்ந்த படைப்பு. இந்தக் கதையைப் படித்து முடித்த பின் காலத்தில் நிலைத்து நிற்கக்கூடிய சிறுகதையைப் படித்த திருப்தி எனக்கு ஏற்பட்டது.

2-5-1966
தஞ்சை — தஞ்சை அன்பரசன்

நான் ஸ்ரீமதி வைஜயந்திமாலாவின் அழகர் குறவஞ்சி நாட்டிய நாடகத்தைக் காணவில்லை. ஆனால் அதைப் பற்றிய புகைப்படங்களை 27-3-66 'இல்லஸ்ட்ரேட் வீக்லி'யில் கண்டேன். அதில் வைஜயந்தி மாலா அவர்கள் அழகர் பெருமாளின் விக்கிரகத்தின் பக்கத்தில் தாயாராகக் காட்சி தருவது போல் ஒரு புகைப்படம் கண்டேன். மிக வருத்தமடைந்தேன். ஒரு நடிகரோ அல்லது நடிகையோ அவ்வேடத்தைப் பூண்டு அங்கு நின்றால் கலை குன்றிவிடுமா? விக்கிரகங்களை எங்கு கண்டாலும் வணங்கி வழிபடும் நமது பண்பாட்டுக்கு இது ஒவ்வாதது.

கல்கத்தா
16-3-66 — ஜெ. ஸ்ரீனிவாசன்

Edited printed & published by T. Sadasivam on behalf of Messrs. Bharathan Publications Private Ltd., at the Kalki Press, Kilpauk, Madras-10

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

# CLEVITE
## B E A R I N G S
## ARE THE CHOICE OF LEADING ENGINE MANUFACTURERS






DODGE



MEADOWS





















CLEVITE Bearings, designed just right for durability and strength, are the first choice of the original engine manufacturers in India, because they ensure—maximum life, outstanding performance under the most rugged conditions and increased strength and resistance to corrosion.

CLEVITE Bearings are guaranteed to match or even surpass Original Equipment specifications.

**BIMETAL BEARINGS LIMITED**
SEMBIAM MADRAS-11

In technical collaboration with Clevite Corporation Cleveland, Ohio, U.S.A.